KALKI
13.8.2006 ரூ.8.00
80 பக்கங்கள்


# கல்கி

குடும்பத்துடன் படிக்க...





## "திருமாவளவன் திரும்ப வேண்டும்!"

-ராமதாஸ் அழைப்பு

RAMANA'S

NEW
RAMANA'S
சத்து மாவு

மாசமாயிருக்கிற
நாத்தனாருக்கு
இடுப்பு வலியோட
மூட்டு வலி...

வயசான
மாமியாருக்கு
தீராத
மலச்சிக்கல்...

அடிக்கடி
களைப்பாகும்
டயபட்டிக்
மாமனார்...

சோர்வாய்
வீடு திரும்பும்
குழந்தைகள்...

# அதெல்லாம் பழைய கதை..!

# இப்ப இது ஆரோக்கியமான குடும்பம்






குடும்பத்தினர்அனைவரும் ஆரோக்கியமாய் வாழவும், துடிப்புடன் செயல்படவும் தேவையான போஷாக்கு நிறைந்த சத்துமாவு, பதினைந்து வகையான தானியங்களின் சரியான கலவையான ரமணாஸ் சத்துமாவு. தினந்தோறும் விரும்பிய வகையில் உண்டு வந்தால் உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு குறைவேது.?

For queries - ramanasfoodproduct@yahoo.com, Ph: 94433 25618

அடுத்த இதழில் ஆரம்பம்...

கவிஞர் யுகபாரதி எழுதும்...

# நேற்றைய காற்று!

திரையிசைத் தெம்மாங்கு தொடர்



• படம் : ஸ்ரீஹரி

## உள்ளே...



"ஆண்டு ஒன்றுக்கு மூன்று வீரர்கள் மட்டுமே அதிகபட்சமாக போதை மருந்து தொடர்பான குற்றச்சாட்டுகளுக்கு அனுமதிக்கப்படுகிறார்கள். ஆனால் இப்பொழுது நான்கு இந்திய அணி வீரர்கள் கையும் களவுமாகப் பிடிபட்டுள்ளதால் இந்திய அணிக்கு ஒரு வருட காலம் தடை விதிக்கப்படுகிறது. மேலும் அபராதமாக முப்பதாயிரம் டாலரும் செலுத்த வேண்டும்."

சர்வதேச பளுதூக்கும் அமைப்பு இந்தியா மீது இப்படியொரு தீர்ப்பைச் சமீபத்தில் வாசித்துள்ளது. போதைக்கு எதிராக, காலம் காலமாகச் சமூக அமைப்புகள் போராடி வரும் வேளையில், இப்படியொரு பளீர் தீர்ப்பு! மெல்பர்ன் காமன்வெல்த் போட்டியின்போது தெஜ்பிர் சிங், எட்வின் ராஜு, ஷைலஜா புஜாரி, பிரமீலாவல்லி போன்ற வீரர்கள் 'ஸ்டேனோஷால்' என்கிற போதை மருந்தை உட்கொண்டதால் ஏற்பட பின்விளைவுகள்தான் இத்தனையு ஏற்கெனவே 2004 ஏதென்ஸ் ஒலி பிக்ஸுக்குப் பிறகு மூன்று வீரர்க போதை மருந்து உட்கொண்டதா அப்போதே இந்திய அணிக்கு ஒரு வருட தடை விதிக்கப்பட்டது. அந்தக் காய முழுவதுமாக ஆறுவதற்குள் அடுத் சம்மட்டி அடித் தீர்ப்பு. இந்த நான் பேரால் கொழும்பு தெற்காசியப் போட் மற்றும் தோஹா ஏசியன் கேம்ஸிலு இந்திய பளுதூக்கும் வீரர்களால் கா வைக்க முடியாது.

பளு தூக்கும் வீரர்களுக்கு எப்பொ தும் இந்தியாவின் வாயில் சர்க்கரையை தூவித்தான் பழக்கம். பளு தூக்கும் வீரா கனையான மல்லேஸ்வரிதான் முத இந்தியப் பெண்ணாக ஒலிம்பிக் போட் யில் பதக்கம் வென்றார். 93, 94 ஆண் களில் உலக சாம்பியனாக வலம் வந்தா இந்தியா முழுவதும் அறியப்பட்ட குஞ் ராணி தேவி இதுவரைக்கும் ஐம்பது சர் தேசப் பதக்கங்களை வாங்கிக் குவித்தவ உலக அளவிலான நூறு சிறந்த வீரர்களி குஞ்சராணியும் ஒருவர் என்று சர்வதே பளுதூக்கும் அமைப்பு ஒருசமய பாராட்டுப் பத்திரம் வாசித்தது குறி பிடத்தக்கது. சமீபத்தில் மெல்பர்னி நடந்த காமன்வெல்த் போட்டியி இந்தியாவுக்கு, பளுதூக்கு போட்டியில் மூன்று தங்க

# போதையேறி
# போச்சு!

- இந்தி

பதக்கங்கள் கிடைத்தன.

**ஏ**தனால் வீரர்கள் தொடர்ந்து போதை மருந்து உட்கொண்டு இடியாப்பச் சிக்கல்களை உருவாக்குகிறார்கள்?

இந்தியாவில் நடக்கும் எந்த உள்ளூர்ப் போட்டிகளிலும் போதை மருந்து சோதனை என்கிற பேச்சே கிடையாது. இதற்கு நிர்வாகம் சொல்லும் சாக்கு இதுதான். "ஒரு வீரருக்குச் சோதனை செய்ய நான்காயிரம் ரூபாய் செலவாகிறது. இந்திய பளுதூக்கும் அமைப்போ பரம ஏழை. பத்து பேருக்குச் சோதனை செய்தாலே செலவு ஐம்பதாயிரத்துக்கு மேலாக எகிறும். கட்டாயம் எங்களால் இந்தச் செலவைத் தாங்கிக் கொள்ள முடியாது. அதோடு வீரர்கள் பலரும் படிப்பறிவோ உலக அறிவோ இல்லாதவர்கள். அவர்களுக்கு எது தவறு, எது சரி என்பது அறவே தெரியாது. எப்படியாவது வலுவான உருளையைத் தூக்கிச் சாதித்துவிட வேண்டும் என்பதற்காகவே குறுக்கு வழியைப் பின்பற்றத் தொடங்கிவிடுகிறார்கள்."

தடையின் எதிரொலியாக வீரர்களுக்கு நடக்கும் பயிற்சி முகாம்களின் எதிர்காலம் கேள்விக்குறியாகியுள்ளது. "அரசு அனுமதிக்காவிட்டால் பேசாமல் வீட்டில் பயிற்சி எடுத்துக் கொள்ள வேண்டியதுதான்'' என்கிறார், ஃபெடரேஷன் செயலாளர் பல்பீர் பாட்டியா. பாவம் பளு தூக்கும் வீரர்கள். கிரிக்கெட், டென்னிஸ் வீரர்கள் மாதிரி அவர்கள் தங்கத் தட்டில் சாப்பிடுபவர்கள் அல்லர். மனித மலைகள் போலத் தோற்றம் உடையவராக இருந்தாலும் மூன்று வேளையும் பஞ்சப்பாட்டு பாடுபவர்கள்.

''உணவுக்கு ஏற்பாடு செய்து கொடுங்கள். உடல் வலியோடு மன வலியையும் தாங்கிக் கொள்ள எங்களிடம் சக்தி கிடையாது'' என்கிறார் மல்லேஸ்வரி. சரி, 'பளு தூக்கும் வீரர்கள் போதை மருந்து சாப்பிட்டது சரிதானா?' என்றால் யாரும் பேசவே தயங்குகிறார்கள்.

ஏற்கெனவே பளுதூக்கும் விளையாட்டில் சொற்ப அளவிலான வீரர்களே உள்ளனர். மேலும், இவை போன்ற நிகழ்வுகளால் அடுத்த தலைமுறையினர் இந்த விளையாட்டின்மீது துளி அளவேனும் ஆசை வைப்பார்களா?

**- ச.ந.கண்ணன்**

# அணிக்குத் தடா


# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**
**ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# நீதித்துறையின்

**சென்னை உயர் நீதிமன்றத்துக்குப் புதிதாக ஐந்து நீதிபதிகள் நியமனம் செய்யப்பட்டிருக்கின்றனர். இவர்களில் வெங்கடராமன், சந்துரு, ராமசுப்ரமணியம், மணிகுமார் ஆகிய நால்வரும் வழக்கறிஞர்களாக இருந்தவர்கள். செல்வம் மாவட்ட நீதிபதியாகப் பணியாற்றியவர். நீதிபதி சந்துரு மனித உரிமை, பத்திரிகைச் சுதந்திரம், கருத்துச் சுதந்திரம் ஆகியவை சம்பந்தப்பட்ட பல வழக்குகளைக் கையாண்டவர். நீதிபதி சந்துருவின் மனைவி பாரதி, ஒரு பெண்ணிய ஆர்வலர். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் வரலாற்றுத் துறையில் பணியாற்றுகிறார். ஒரே பெண் சக்தி, ஆறாம் வகுப்பு படிக்கிறார். நீதிபதி சந்துருவைச் சந்தித்துப் பேசினோம்.**

இரயில்வேயில் வேலைபார்த்துக் கொண்டிருந்த கிருஷ்ணசாமி, தமது மனைவி சரஸ்வதிக்கு சென்னை மாநகரத்தைச் சுற்றிக் காட்டிக் கொண்டு வந்தார். "இதுதான் ஹைகோர்ட்" என்று காட்டியபோது "நம்ம நாலு பையன்கள்ல ஒருத்தனாவது, வக்கீலுக்குப் படிச்சு இந்த ஹைகோர்ட்டுக்கு வருவாங்களா?" என்று ஆர்வம் பொங்கக் கேட்டார் சரஸ்வதி. அப்போது கிருஷ்ணசாமி, மனைவிக்கு என்ன பதில் சொன்னார் என்று தெரியவில்லை. ஆனால் இப்போது அவர்களின் மூன்றாவது மகன், முப்பது ஆண்டுகள் வழக்கறிஞராக இருந்துவிட்டு கடந்த வாரம் சென்னை உயர் நீதிமன்றத்தில் நீதிபதியாகவே அமர்ந்துவிட்டார். ஆனால் அதைப் பார்ப்பதற்கு, சந்துருவின் பெற்றோர் இப்போது உயிருடன் இல்லை.

வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட்டவர் சந்துரு. தமது ஐந்தாவது வயதில் தாயை இழந்தவர். எல்லாமே அப்பாதான். தாயும், தந்தையுமாக இருந்து பிள்ளைகளை வளர்த்தார். பள்ளி நாட்களிலேயே அவருக்கு அரசியல் ஈடுபாடு உண்டு. கல்லூரியில் சேர்ந்து பி.யூ.சி. படித்தபோது தந்தையும் மரணமடைந்தார். டாக்டருக்குப் படிக்க ஆசை. ஆனால் சீட் கிடைக்கவில்லை. லயோலா கல்லூரியில் பி.எஸ்.சி. சேர்ந்தார். விடுதிப் பிரச்னை காரணமான போராட்டம், ஹிந்து பேப்பரில் கட்டுரை எழுத உதவியது என்று சில காரணங்களால், இரண்டாம் வருடத்துடன், டி.சி.யைக் கொடுத்துவிட்டார்கள்!

தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரி முதல்வர் சந்திரன் தேவநேசன் "கருத்துச் சுதந்திரத்துக்குத் தடை போடக்கூடாது"என்று சொல்லிக் கல்லூரியில் சேர்த்துக் கொண்டார். ஹிந்து ராம், மைதிலி சிவராமன், ப.சிதம்பரம் ஆகியோருடன் இணைந்து 'ராடிகல் ரெவ்யூ' என்று ஒரு பத்திரிகை நடத்தினார். மாணவர்களை ஒன்று திரட்டி தமிழக மாணவர் அமைப்பை உருவாக்கினார். அதுதான் இன்றைய இந்திய மாணவர் சங்கத்துக்குப் பிள்ளையார்சுழி.

அண்ணாமலை பல்கலைக்கழக மாணவர் உதயகுமார் மரணத்தையடுத்து மாநிலம் தழுவிய போராட்டம் நடந்தது. அது குறித்து விசாரணை உத்தரவிடப்பட்டது. "தற்காலிக நீதிபதியைக் கொண்ட விசாரணையை ஏற்றுக்கொள்ள முடியாது" என்று எதிர்ப்புக் குரல் கொடுத்தாலும், சந்துரு அதே நீதிபதி முன்பு ஆணித்தரமான வாதங்களை எடுத்து வைத்தார். விசாரணை நடந்த கடலூரில் இவருக்குத் தங்க இடம் தரக்கூடாது என்று லாட்ஜ் உரிமையாளர்கள் போலீஸால் மிரட்டப்பட்டனர். பாண்டிச்சேரியில் தங்கிக் கொண்டு விசாரணைக்

கமிஷனுக்குப் போனார். போலீஸ், சந்துருவின் உடன்பிறந்தவர்கள் வீடுகளுக்கும் சென்று மிரட்டியது! நீதிபதி ராமசாமி, விசாரணையில் இளைஞர் சந்துரு காட்டிய ஆர்வத்தைப் பார்த்துவிட்டு "வக்கீலுக்குப்படி. உனக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது" என்று ஆலோசனை கூறினார்.

ஒரு கட்டத்தில் வெறும் போராளி என்பதைவிட சட்டக் கல்லூரி மாணவர் என்ற அடையாளம் சிறந்தது எனக் கருதியதால் சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்தார். நல்ல முறையில் தேறினார். உடனடியாக நெருக்கடி நிலை அமலுக்கு வந்தது. சந்துரு பிசியானார். "ஜனநாயகம் காப்போம்" என்ற முழக்கத்துடன் உயர்நீதிமன்றத்திலிருந்து ராஜாஜி மண்டபம் வரை நடந்த வக்கீல்கள் ஊர்வலம் பெரும் பரபரப்பு ஏற்படுத்தியது.


• நீதிபதி சந்துரு

# லைஃப்!

மூத்த வழக்கறிஞர் கே.கே. வேணுகோபால், தம்மிடம் ஜூனியராகச் சேரும்படி சொன்னனபோது "நீங்கள் பணக்காரர்களுக்காக வாதாடுவீர்கள். நான், தொழிலாளர்களுக்காக மட்டுமே வாதிட விரும்புகிறேன்" என்று சொல்லி மறுத்துவிட்டார் சந்துரு. தொழிலாளர் சம்பந்தப்பட்ட வழக்குகளை ஏற்று நடத்திவந்த ஒரு சட்ட நிறுவனத்தில் சேர்ந்தார். ஏழு ஆண்டுகள் அங்கே பணி புரிந்தார். ஆவின் நிறுவனத்தில் திடீரென்று ஆயிரத்து ஐந்நூறு தொழிலாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டனர். இவர் பணியாற்றிய நிறுவனம் ஆவின் நிர்வாகத்தின் சார்பில் வாதிட முன்வந்தபோது, சந்துரு அந்த நிறுவனத்திலிருந்து ராஜினாமா செய்துவிட்டு, தொழிலாளர்கள் சார்பில் ஆஜரானார். பதினேழு வருடங்கள் கேஸ் இழுத்துக்கொண்டு போனது. இறுதி வெற்றி தொழிலாளர்களுக்குத்தான்.

இவர் எடுத்துக்கொண்ட மனித உரிமை மீறல் சம்பந்தமான கேஸ்களில் வழங்கப்பட்ட தீர்ப்புகள், இன்னமும் சாமானியனுக்கு இந்த நாட்டில் நீதி கிடைக்கும் என்பதை நிரூபித்தவை. அவற்றில் முக்கியமான ஒன்று ராஜாக்கண்ணு வழக்கு. நரிக்குறவச் சமூகத்தைச் சேர்ந்த ராஜாக்கண்ணுவை, ஒரு திருட்டு கேஸில் சந்தேகத்தின்பேரில் போலீஸ் கைதுசெய்தது. அவரை லாக்-அப்பில் அடித்துச் சித்ரவதை செய்து கொன்றுவிட்டதாக ராஜாக்கண்ணுவின் உறவினர்கள் இருவர் சொன்னார்கள். போலீஸ் அந்த இருவரையும் மிரட்டி, ஊரைவிட்டே விரட்டி விட்டார்கள். ராஜாக்கண்ணுவைக் கோர்ட்டில் ஆஜர்படுத்த வேண்டும் என்று ஹேபியஸ் கார்பஸ் மனு போட்டார் சந்துரு. அவர் போலீஸ் காவலிலிருந்து தப்பி ஓடிவிட்டார் என்று போலீஸ் சொல்ல, அந்த



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதைகள்

1. **குலதெய்வம்** - பி.ஸ்ரீகாந்தன், ஸ்ரீரங்கம்
2. **சந்நியாசி** - வி.ஸ்ரீனிவாசன், சாலி கிராமம்
3. **கிரிக்கெட் சுழல்** - கி.சந்தானம், மதுரை
4. **கொவ்வை படர்ந்த வேலி** - தூரன் குணா, பெங்களூர்
5. **விடையில்லாத வினா** - பானுகுமார், மும்பை
6. **உரம்** - மாரம்பாடி பாஸ்கர், சாத்தூர்
7. **முதுமையின் இறைஞ்சல்** - சீதாராம், போபால்
8. **மதி-மதிப்பு** - பத்மினி பட்டாபிராமன், சென்னை - 28
9. **எந்நாளும் மேன்மக்கள்** - கல்யாண் குமார், சென்னை - 33
10. **மனப்பேய்** - பத்மா நாராயணன், சென்னை - 4
11. **வீடு பேறு** - ஏ.ஏ.ஹெச்.கே.கோரி, சென்னை - 40
12. **என் தாயே, நன்றி!** - அகிலா கிருஷ்ணன், சென்னை - 26
13. **வாழும் மனித ஜாதி** - எஸ்.குமார், சென்னை - 102
14. **அவள்** - ஜெயந்தி சங்கர், சிங்கப்பூர்
15. **நியாயத்தின் வாசனை** - உமா கல்யாணி, தோவாளை

இரண்டு உறவினர்களையும், கேரளா வரை சென்று தேடி அழைத்து வந்தார், சந்துரு. ராஜாக்கண்ணுவை அடித்துக் கொன்ற போலீஸ், மிளகாய்ப் பொடியை, அவர் கண்களில் தூவி, அவர் இறந்து விட்டாரா என்று பரிசோதித்துப் பார்த்ததாகத் தெரியவந்தபோது, நீதிபதிகளே அதிர்ந்து போனார்கள். சம்பந்தப்பட்ட போலீஸார் அனைவர் மீதும் வழக்கு தொடரப்பட்டு, தண்டனை வழங்கப்பட்டது. சர்ச்சைக்குரிய கண்டதேவி கோயில் திருவிழாவில், தலித்துகளுக்கும் கோயில் தேர் இழுக்கவும், கோயில் மரியாதையைப் பெறவும் உரிமை உண்டு என்று வாதாடி வென்றவர் சந்துரு.

சென்னை நீதிபதியாக இருந்த சத்தியதேவ், ''உங்களுக்கு நீதிபதி பொறுப்பு அளிக்கப்பட்டால் அதனை மறுக்காமல் ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று ஆலோசனை கூறினாராம். காரணம், இன்று பல மூத்த வக்கீல்கள், தங்கள் பிராக்டீஸ் மூலம் சம்பாதிக்கும் பெரும் வருமானத்தை இழக்க விரும்பாமல், நீதிபதி பொறுப்பை ஏற்க மறுத்துவிடுகிறார்கள் என்பதுதான்! மூத்த வழக்கறிஞரான சந்துருவிடம் சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி "நீதிபதி பொறுப்பினை ஏற்க சம்மதமா?" என்று கேட்டதும், உடனே சம்மதத்தைத் தெரிவித்துவிட்டார் சந்துரு.

ஒரு மிகச் சிறந்த வழக்கறிஞரின் சேவைகளை இழந்துவிட்டதாக சிலர் வருந்தினாலும் தார்மிக உணர்வும் மனித நேயமும் மிக்க ஒரு நீதிபதியைப் பெற்றதில் தமிழகம் மகிழ்கிறது.

சந்திப்பு :
**எஸ்.சந்திரமௌலி**

CUB

# சிட்டி யூனியன் வங்கி

## உங்கள் டெபாசிட்டுகளுக்கு வழங்கும் வட்டி 9% வரை

எங்கள் வாடிக்கையாளர்களின் மகிழ்ச்சியே எங்கள் இலட்சியம்.
எனவேதான் டெபாசிட்டுகள் மீதான வட்டி விகிதத்தை
9% வரை உயர்த்தியுள்ளோம்.

| காலம் | வட்டி விகிதம் ஆண்டுக்கு (%) - குறிப்பிட்ட கால டெபாசிட்டுகள் | மூத்த குடிமக்களுக்கு |
|---|---|---|
| 1 ஆண்டு மற்றும் அதற்குமேல் ஆனால் 2 ஆண்டுகளுக்குக் குறைவாக | 7.50% | 8.25% |
| 2 ஆண்டுகள் மற்றும் அதற்குமேல் ஆனால் 3 ஆண்டுகளுக்குக் குறைவாக | 7.75% | 8.25% |
| 3 ஆண்டுகள் மற்றும் அதற்குமேல் ஆனால் 5 ஆண்டுகளுக்குக் குறைவாக | 8.00% | 8.50% |
| 5 ஆண்டுகள் மற்றும் அதற்குமேல் | 8.25% | 9.00% |

# சிட்டி யூனியன் பாங்க் லிட்.

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001, தமிழ்நாடு. போன் : 0435-2432322 ஃபேக்ஸ் : 0435-2431746
E-mail : csd@cityunionbank.com Website :www.cityunionbank.com

வாழ்க்கை முழுவதும் உங்களுடன்!

முதல் படத்திலேயே தேசிய விருது வாங்கியவர் இயற்கை பட இயக்குநர் ஜனநாதன். அடுத்த படமும் திரையரங்கை நிரப்ப வேண்டும் என்பதற்காக ஜீவா-நயன்தாராவை வைத்து சுறுசுறுப்பாக 'ஈ' ஓட்டிக் கொண்டிருக்கிறார். அவரிடம் பேசியதிலிருந்து.

**உங்கள் கதாநாயகனும் ரௌடியாமே?**

"அப்படி ஒரே வரியில் முடிவுக்கு வந்துவிடக்கூடாது. இது நிச்சயம் தாதா, ரௌடிகளின் வாழ்க்கையை ஆழமாகப் பார்க்கும் படமல்ல. இது சென்னை வாழ்க்கையை மையமாகக் கொண்ட படம். ஐம்பது வருடங்களுக்கு முன்பு சென்னையில் கூவம் ஆறு குடிநீருக்கும் குளிப்பதற்கும் பயன்பட்டிருக்கிறது. பக்கிங்காம் கால்வாயில் சரக்குக் கப்பல் போக்குவரத்து நடந்திருக்கிறது. இப்போது அவை கழிவுநீர்த் தொட்டிகளாக மாறிவிட்டன. கிராமத்துக்கென்று இருப்பதுபோல நகரத்துக்கும் ஒரு விசேஷமான வாழ்க்கை இருக்கிறது. என் ஹீரோ ஜீவா சேரியைச் சேர்ந்தவன். பஞ்சம் பிழைக்க வழியில்லாமல் ரௌடியாக மாறி சமூகத்தால் அலைக்கழிக்கப்படுகிறான். சாக்கடையிலிருந்து ஈதான் உற்பத்தியாக முடியும். அதனால்தான் படத்துக்கு அப்படியொரு தலைப்பு."

**முதல் படத்துக்கே தேசிய விருது கிடைக்கும் என்று நினைத்தீர்களா?**

"'இயற்கை'யில் ஒரு ஷாட்கூட விருதுக்காக எடுக்கப்பட்டது அல்ல. சப்டைட்டில் வைக்க பணம் இல்லாமல் அப்படியேதான் விருதுக்காக அனுப்பினோம். அந்த வருட தேசிய விருதுக்காக நூற்று ஐம்பது படங்கள் போட்டியிட்டன. நகரம் அல்லது கிராமம் இரண்டும்தான் மற்ற படங்களின் பின்னணியாக இருந்தது. 'இயற்கை' இதிலிருந்து மாறுபட்டு கடல் சார்ந்த படமாக இருந்ததைக் கண்டு 'ஒரு லத்தின் அமெரிக்கப் படம் பார்ப்பது போலிருந்தது' என்று விருதுக் குழுவினர் சான்றிதழ் கொடுத்தனர். படத்தில் பங்காற்றிய அனைவருக்கும் ஒரு கௌரவத்தை ஏற்படுத்திக் கொடுத்தது 'இயற்கை'."

# "சினிமாவின் முகம் நிச்சயம் மாறும்!"



• ஜனநாதன்

**இந்தக் கௌரவம் தொடருமா?**

"தமிழ் சினிமாவில் அதிக வசூல் செய்த படங்களைப் பட்டியலிட்டால் காதல், ஒருதலை ராகம், ஆட்டோகிராப் போன்ற யதார்த்தத்தை வெளிக்காட்டிய படங்கள்தான் முன்னணியில் இருக்கும். என் படங்கள் இந்த ரகத்தையொட்டியே அமையும். சில ஹாலிவுட் படங்களைக் காட்டிலும் தமிழ்ப் படங்களின் பட்ஜெட் அதிகம். இந்த வசதிகளையெல்லாம் கொண்டு உலகத் தரத்தில் உலக மக்கள் பார்க்கும் படங்களை எடுப்பதுதான் என் திட்டம். நம்மிடம் இல்லாத கதைகளா? சூப்பர்மேனைவிட அனுமன் பலசாலி; கில்லாடி. நம்மிடம் கதைகளும் சம்பவங்களும் கொட்டிக் கிடக்கின்றன.

அவற்றைப் படமாக எடுக்கத்தான் நாம் முயற்சி செய்வதில்லை."

**சினிமாச் சூழல் எப்படியிருக்கிறது?**

"முன்பெல்லாம் சினிமாவில் வேலை என்றால், ஏதோ நிலச்சுவான்தாரிடம் வேலை பார்ப்பது போலிருக்கும். ஆனால் இப்போது நிலைமை அப்படியில்லை. தொழில் படித்தவர்கள் உள்ளே நுழைகிறார்கள். உலகிலேயே சினிமாவுக்குக் கல்லூரி நடத்துவது இந்தியாவில்தான். பூனே திரைப்படக் கல்லூரி, சென்னையிலுள்ள திரைப்படக் கல்லூரி இரண்டும் குறிப்பிடத்தக்கவை. வரும் காலங்களில் சினிமாவின் முகம் நிச்சயம் மாறும்."

**'உயிர்' படத்தின் கதை பிரச்னைக்கு ஆளாகி இருக்கிறதே?**

"'பெரும்பாலானக் குற்றங்கள் படுக்கையறையில்தான் தொடங்குகின்றன' என்கிற பெரியாரின் வரிகளுக்கு ஏற்ப பாலியல் விஷயங்கள்தான் சமூகத்தின் பல குற்றங்களுக்கு முதன்மையாக உள்ளன. உறவுகளைக் கையாள்வது என்பது பெரிய அளவில் விவாதிக்கப்பட வேண்டிய ஒன்று. சினிமாவை யாரும் விமர்சனம் பண்ணலாம். ஆனால் என்ன பேசுகிறோம், எப்படிப் பேசுகிறோம் என்பதை ஒரு நிமிடம் சிந்திக்க வேண்டும்."

- சநகன்



• 'ஈ' படத்தில் ஜீவா...

# ஜனநாதன்

**கோ**டம்பாக்கத்தில் இப்போது ரொம்ப ரொம்ப பிஸியாக இருக்கும் ஒரே நபர், பெயர் வித்தகர் பெருமாளு. திரைப்படங்களுக்குத் தமிழில் பெயர் வைத்தால் கேளிக்கை வரி கிடையாதென்று அரசு அறிவிப்பு செய்த அடுத்த நொடியிலிருந்து பெருமாள் காட்டில் வசூல் மழைதான். அப்படி என்னதான் செய்கிறார் பெருமாள்? நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன்.

"நமஸ்தே பெர்மான்ஜி. நம்மேள் இப்போ அஞ்சு தம்மில்ப் படம் தயாரிக்கான். மாடர்னா இர்க்கட்டுமேன்னு அஞ்சுக்கும் இங்க்லீஸ்பேரு வெச்சான். கவர்மெண்டு தம்மில்லே பேரு வெச்சா டாக்ஸ் கட் பண்ணுது. நீங்கதான்ஜி நம்மேள் படங்களுக்கு ப்யூர் தம்மில் பேர் வைக்கணும்ஜி" என்றபடி பெருமாளிடம் வருகிறார் தயாரிப்பாளர் சேட் சௌகான்.

"கவலைப்படாதிங்க சேட்டு. வெக்கிற பேருக்கேத்த துட்டை வெட்டுனீங்கனா போதும். அஞ்சு என்ன, ஐநூறு பேரு கூட வைச்சுத் தருவேன்."

"எவ்ளோ துட்டு வாங்குவீங்கோ?"

"ரொம்பக் கம்மிதான் சேட்டு. ஒரு படத்துக்குப் பேரு வைச்சா வார்த்தைக்கு நூறு ரூபாதான். அதுகூட கேளிக்கை வரியா, ஒவ்வொரு எழுத்துக்கும் அம்பது அம்பது ரூபா கொடுத்தாப் போதும். இப்போ உதாரணத்துக்கு 'நான் சாமி'ன்னு ஒரு பேரு வைச்சா, அதுக்கு ஒரு இருநூறு. கூட டேக்ஸா மூணும், ஆறும் ஒம்பது. பெருக்கல் அம்பது. ஒரு நானூத்தியம்பது. மொத்தமா அறுநூறு ரூபாய் கொடுத்தாப் போதும். 'நான் சாமி - இவன் ஆசாமி அல்ல'ன்னு எக்ஸ்ட்ரா ஒரு பஞ்ச் லைன் கொடுத்தா அதுக்கு ஒரு ஐநூறு. அம்புட்டுதேன்" என்று பெருமான் அசால்ட்டாக அடிக்க, "நிம்மள் டேக்ஸு ரொம்பப் போடுறான். நம்மேள் அஞ்சு பேரு கேக்குறான். கொஞ்சம் கம்மி பண்ணக் கூடாதா?" என்று இடைமறிக்கிறார் சேட்.

"அதை அப்புறம் பாக்கலாம் சேட்டு. முதல்ல படங்களுக்கு வைச்சிருக்கிற பேரைச் சொல்லு."

"ஜூஜூன்னு ஒரு படம் எடுக்கான். ஹீரோ பேரு ஜூகுமார். ஹீரோயின் பேரு ஜூம்மாஞ்சி. ரெண்டு பேரு முதல் எழுத்து தான் படம் பேரு."



"'ஜஃ'க்குப் பதிலா 'சூ'வைப் போடுங்க. சூகுமார், சூம்மாஞ்சின்னு பேரை மாத்தி 'சூசூ'ன்னு வைச்சிருங்க."

சேட் சௌகான் இடைமறித்து, "சூசூன்னா தம்மில் மீனிங் வருதா? அது வேணுமே?"

"அது வேறயா? சரி, ஹீரோ பேரு காத்தவராயன், ஹீரோயின் பேரு காந்தா. படத்தோட பேரு 'காகா'. 'இது கரையாது'ன்னு பஞ்ச் லைன் சேத்துக்கிட்டோம்னா மக்கள் நெஞ்சுல நின்னுரும்ல!"

தயாரிப்பாளர் முகம் மலர்கிறது. "அச்சா அச்சா! நம்மேள் அடுத்த படம் பேரு 'நைன் எல், நாகாத்தம்மன் டெம்பிள் செகண்ட் கிராஸ் லேன்."

"ஏன் அப்படியே, 'நியர் கேகே நகர் பஸ் டிப்போ, குடியாத்தம் போஸ்ட், கொட்டிவாக்கம் தாலுக், வெல்லூர் டிஸ்ட்ரிக்ட், பின்கோட் 603 922'ன்னு ஏதாவது வைக்க வேண்டியதுதானே? படம் பேரை வைக்கச் சொன்னா, போஸ்டல் அட்ரஸ் கொடுக்குறாரு. சரி சரி, இந்தா மாத்திக்கோ, 'நைன்'னா ஒன்பது, 'எல்'லு இங்கிலீஸ்ல பன்னெண்டாவது எழுத்து, அப்ப தமிழ்ல பன்னெண்டாவதா 'ஔ'... இதான் 'ஒன்பது ஔ, நாகாத்தம்மன் கோயில் இரண்டாவது குறுக்குச் சந்து."

"பஹூத் அச்சா. அடுத்த படம் பேரு டார்ச்சர். கொருக்குப் பேட்டைல வாழ்ந்த ஒரு தாதாவோட ட்ரூ ஸ்டோரி."

தலையைச் சொறிந்தபடியே "விட மாட்டீங்களே. யோவ், இப்பல்லாம் ஒவ்வொரு ஷோ முடிஞ்சதும் எல்லாத் தியேட்டரையும் கழுவி விடுறாங்க. ஸ்கிரீன்ல அவ்வளவு ரத்தம் தெளிக்குதாம். நீ பட்டாத்தான் திருந்துவ. படம் பேரு 'ரோதனை'ன்னு வைச்சுக்கோ."

"சூப்பர். அடுத்த படம் பேரு 'ஜில்லுன்னு ஒரு சம்திங்'. லவ் சப்ஜெக்ட்."

"'ஜி'யை 'சி'யாக்கு. 'சம்திங்'னா பல அர்த்தம் இருக்கு. சரி வைச்சுக்கலாம். 'சில்லுன்னு ஒரு என்னவோ ஏதோ!' எப்படி?"

"வாரே வாவ்! அஞ்சாவது படத்துக்கு இன்னும் பேரு வைக்கல. பேரு வைச்சப் புறம்தான் கத ரெடி பண்ணணும். தம்மில்லே ஆக்ஷன் சப்ஜெக்ட்டுக்கு டைட்டில் சொல்லுங்கோ!"

"அழகுக் கொடியின் அசுரக்குத்து, பாயும் சிறுத்தைகளும் பதுங்கும் குரங்குகளும், முரட்டுக் கடி, எவனாயிருந்தாலும் வெட்டுவேன், வேட்டை நாயின் வெறிப்பிடி..."

"அய்யய்யோ, எல்லாமே இங்கிலீஷ் படத்தைத் தமிழ்ல டப் பண்ணி விடுறப்போ வைக்கிற டைட்டில் மாதிரி இருக்குதுங்கோ!"

சௌகானின் பதற்றத்தைக் கண்டு கோபமாக "அடப்பாவிகளா, ஏதோ ஒரு மொழிப் படத்தைத் தமிழ்ல டப் பண்ணுறப்போ சுத்த அக்மார்க் நெய் வடியிற தமிழ்ல பேரு வைக்கிறீங்க. வரிவிலக்குன்னு சொன்னவுடனேதான் தமிழ்ப் படத்துக்குத் தமிழ்ப் பேரையே தேடுறீங்க."

"ஹிஹி... துட்டு முக்யம்ஜி. எனக்கு மக்கள் வாய்ல இருந்து ஈஸியா வெளிய வர்ற மாதிரி ஆக்ஷன் சப்ஜெக்ட்டுக்கு ஒரே எழுத்துல பேரு சொல்லுங்கோ. நல்லாயிருக்கும்."

"'தூ'ன்னு வைச்சுக்கோ. இந்தா சேட்டு பில்லு. மொத்தம் இருபதாயிரத்து அம்பது ரூபா. எடு எடு."

"அரே பாப்ரே! இதுக்கு சேட்டு டாக்ஸே கட்டிருவான். ஆளே விடு." (சேட் ஓட, பெருமாள் சுத்தத் தமிழில் திட்டிக் கொண்டே துரத்துகிறார்.)

- முகில்

# அழகுக் கொடியின் அசுரக்குத்து!

# சுமி சூப்பர்



• ப்ரீத்தி ஜிந்தா

• கண்டரரு மோகனரு



**ரொ**ம்ப கடுப்பாகாம இந்த முதல் ஸென்டன்ஸை மட்டும் லாஸ்ட்லேருந்து ஃபஸ்ட் படிச்சுப் பாருங்க. ஏன் எதுக்குன்னு லாஸ்ட்ல சொல்றேன்!

பண்ணியிருக்காங்க முயற்சி போக வீட்டுக்குப் பிரதமர் ராத்திரி நான் ஒரு சேர்ந்து மெக்கானிக் கோட என்கிற இம்ரான். ஹோஸ் டஸ் ஏர் பேரும் இரண்டு வீணா, யோகிதா.

**செ**க்யூரிட்டியை மீறி உள்ளே போக டிரை பண்ணினப்போ மாட்டிக்கிட்டாங்க. பொய் பேரை வேற கொடுத்திருக்காங்க. தலா 25,000 ரூபாய் பணம் கட்டி பெயில்ல வந்தவங்கள, 'ஏன் இப்படிப் பண்ணினீங்க?'ன்னு கேட்டப்போ,

''கும்மா ஜாலிக்குத்தான்''னு பிளெய்னா பதில் சொல்லிருக்காங்க. ஏர் ஸஹாரா இந்த இரண்டு பேரையும் சீட்டு கிழிச்சுடுச்சு!

நாட்டுல 'கும்மா ஜாலிக்கு' இன்னும் யார் யாரு என்னென்ன பண்ணிக்கிட்டிருக்காங்கன்னு பார்ப்போமா..?

**ப்ரீ**தி ஜிந்தா டெல்லியில ரத்த தானம் பண்ணியிருக்காங்க. ஒரு ஜாலிக்குத்தான்னு அவங்க முகத்தைப் பார்த்தாலே தெரியலை?!

பீனா கண்ணன் - இவங்க சீமாட்டி சில்க்ஸ் ஓனர். ஆரணியில தறிக்காரங்களைப் பிடிக்க 1300 அடி

# சும்மா

# மார்க்கெட்!



நீளத்துல ஒரு புடைவை நெய்ய வைச்சிருக்காங்க. யெஸ், ஸில்க் ஸாரிதான். இந்த ஸாரியில் உலக அதிசயங்கள் ஏழு, இந்திய நடன வகைகள் அரை டஜன், காந்தி முதல் ஈ.கே.நாயனார் வரையிலான அரசியல் தலைவர்களின் முகங்கள், செடி, கொடி, பழம், ஸ்டேட் சிம்பல்ஸ், இந்தியா மேப், இரண்டு இஞ்ச் சைஸ்ல புட்டா (அதாங்க ரவுண்ட் ரவுண்டா காசு டிசைன்) அப்படின்னு என்னென்னவோ பொம்மை தெரியுமாம்... (ஊஹூம் அவங்க என் போட்டோவை இன்னும் கேட்டனுப்பலை...!)

ஆயிரத்து முந்நூறு அடி புடைவை எதுக்கு? யாரு உடுத்திப்பாங்க? எதுக்கு இந்த பயாஸ்கோப்புன்னு கேட்டா, போதீஸ்ல 1276 அடி ஸாரி நெய்து கின்னஸ் ரெக்கார்ட் பண்ணினதை பிரேக் பண்ணணுமாம்.

சரி அந்த ரெக்கார்டை எதுக்கு பிரேக் பண்ணணும்னா... சும்மா ஜாலிக்குத்தான்!

**மி**ஸ்-டேக்னு ஒரு மாத்திரை. கருத்தரிக்காம இருக்கணும்னா 'விபத்து' (?) நடந்த 72 ஹவர்ஸுக்குள்ள இதை விழுங்கி வைச்சா போதும், கருவே உருவாகாதுன்னு விளம்பரம் பண்றாங்க. 'அவசர கால கருத்தடை மாத்திரை'ன்னு சப் டைட்டில் வேற... சரி மாத்திரையோட பெயர்ல 'மிஸ்'ஸுக்கும் 'டேக்'குக்கும் நடுவுல ஒரு ஹைஃபன் இருக்கே, அதுக்கு என்ன அர்த்தம்...? அதுவும்

சும்மா ஜாலிக்குத்தானோ?!

ஆடி தள்ளுபடி அட்வர்டைஸ்மெண்ட்ஸோட, ஆடி மாச கோயில் பண்டிகை நியூஸும் இப்போ நியூஸ்பேப்பர்ஸை ரொம்ப ஆக்கிரமிக்குது. ஃபோட்டோவோட ஒரு நியூஸ் - பத்து லட்சம் ரூபாய்க்கான (ருபீ நோட்ஸ் தான்!) கரன்ஸியைக் கொண்டு ஒரு அம்மனுக்கு அலங்காரம் பண்ணியிருக்காங்க. முகத்தைத் தவிர மத்த பாகமெல்லாம் நோட்டால 'கவர்' பண்ணி விசிறி விசிறியா நோட்டுங்களை வளைச்சு வைச்சு... எந்த சாஸ்திரத்துல சொல்லியிருக்கு கடவுளை காசால கவர் பண்ணலாம்னு? எந்த சாமி கேட்டது 'இப்படி எனக்கு அலங்காரம் பண்ணு'ன்னு...? சும்மா ஜாலிக்குத்தானே!

**அ**ம்மன் கோயில் டு அய்யப்பன் கோயில்... போகக்கூடாத இடம்னு தடை பண்ணினதால சும்மா போய்ப் பார்த்தோம்னு பேசற லேடீஸ்! அவங்களுக்கு வசதி பண்ணிக் கொடுக்கற குருக்கள்மார்... இதுவும் ஜாலிக்... வேண்டாம். ஐ வில் ஸ்டாப் ஹியர்.

நானும் ஜாலிக்கு ஏதேனும் பண்ணணுமில்லே... அதனால்தான் இந்த வாரம் சூப்பர் மார்க்கெட் மேட்டர்ல முதல் சில வரிகளை 'பாக்வர்ட்ஸ்' எழுதியிருக்கேன்...! ●

# ஜாலிக்குத்தான்!




கல்கி

2006 ஆகஸ்ட் 13
விய ஆடி 28
மலர் : 65
இதழ் : 2




தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## மனம் மாறிய பயங்கரவாதிகள்!

இஸ்லாமிய பயங்கரவாத அமைப்பைச் சேர்ந்த பன்னிரண்டு இளைஞர்கள் இந்திய ராணுவத்திடம் சரணடைந்திருக்கிறார்கள். பாக்.ஆக்கிரமிப்பு காஷ்மீர் பகுதியில், பாக் அரசாலும் பாகிஸ்தானின் உளவு அமைப்பான ஐ.எஸ்.ஐயாலும் துன்புறுத்தப்பட்டதாக இவர்கள் கூறியிருக்கிறார்கள்! ஜிஹாத் என்ற பெயரில் பாகிஸ்தானும் ஐ.எஸ்.ஐயும் தங்களை வன்முறையில் ஈடுபட வைத்ததெல்லாம் அப்பட்டமான சுயநலத்துக்காகத்தான் என்பதை இந்த இளைஞர்கள் மிகத் தாமதமாகப் புரிந்து கொண்டு, ''இந்திய ராணுவத்தைத் தாக்க எங்களை அனுப்பி வையுங்கள்'' என்று நாடகமாடி தப்பி வந்திருக்கிறார்கள்!

''முதல் ஜிஹாத் (இறை கட்டளை) பெற்றோர் சொல்லைத் தட்டக் கூடாது என்பதுதான்! அதைக் கடைப்பிடித்திருந்தால் நாங்களும் இன்று பத்திரிகையாளர்களாகவோ டாக்டர் / இன்ஜீனியர்களாகவோ உருவாகி பாதுகாப்புடன் வாழ்ந்து கொண்டிருப்போம். ஆனால், பாகிஸ்தானை நம்பி மோசம் போனோம். இன்று பலிகடாவாக்கப்பட்டிருக்கிறோம்'' என்று இந்த இளைஞர்களுள் ஒருவர் பேசியிருப்பது நாடு முழுவதும் மட்டுமின்றி உலகெங்கும் பிரகடனப்படுத்தப்பட வேண்டும்.

சிமி (SIMI) எனப்படும் இந்திய இஸ்லாமிய மாணவர்கள் அமைப்பிலிருந்து விலகி வெளியேறியிருக்கும் சயீத்கான் என்பவரும் இதையேதான் சொல்கிறார். சிமி மும்பை கிளையின் முன்னாள் தலைவரான இவர், 1991-ல்






அவ்வமைப்பு, வன்முறையை வரித்துக்கொண்டபோது விலகி வந்தவர். "சக மனிதர்களைக் கொல்வதன்மூலம் ஒருபோதும் கடவுளை அடைய முடியாது" என்று கூறும் சயீத், இந்திய மதச்சார்பின்மை குறித்து இஸ்லாம் மக்களுக்கு எடுத் துரைத்து வருகிறார்.

ஜூலை 11 மும்பை குண்டு வெடிப்பு தொடர்பாக காவல்துறை சயீதிடம் விசாரணை நடத்தியபோது, தமது தரப்பை விளக்கிக் கூறி, சிமியிலிருந்து பிரிந்து வந்து தனி அமைப்பு தொடங்கி வன்முறையைக் கண்டனம் செய்து வருவதைத் தெரிவித்திருக்கிறார்.

இந்திய அரசாங்கம் இச் சம்பவங்களால் விழிப்படைந்து பயங்கரவாதத்தை எதிர்கொள்ளும் வகையில், ஒருங்கிணைந்த, ஆக்கபூர்வமான அணுகுமுறையைக் கைகொள்ளுதற்குத் தருணம் கனிந்திருக்கிறது.

சமீபத்தில் ஜம்மு-காஷ்மீர் உயர் நீதிமன்ற வைர விழாவில் உரையாற்றிய குடியரசுத் தலைவர் அப்துல் கலாம், பயங்கரவாத குற்றங்களுக்கு விரைவாக நீதி வழங்கப்படவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியுள்ளார். இதன் மூலம், பயங்கர வாதம் பயன் தராது என்றும் அதே சமயம் குற்றமற்றவர்கள் பலிகடா ஆக்கப்பட மாட்டார்கள் என்பதும் மக்களுக்குத் தெரியவரும்.

போதுமான வேலை வாய்ப்புகள் உருவாக்கப்பட்டு, இளைஞர்கள் உழைத்து உயர வழி வகை செய்யப்பட்டால் அதன் விளைவாகவே பயங்கரவாதம் முறியடிக்கப்பட்டு விடும்; வேலை வெட்டி இல்லாத இளைஞர்களதான் பயங்கரவாதத்துக்கு ஈர்க்கப் படுகிறார்கள் என்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார் குடியரசுத் தலைவர்.

பயங்கரவாதத்துக்கு எதிராக உளவுத்துறையும் காவல்துறையும் இணைந்து திறம்படச் செயல்படுவது ஒருபுறமிருக்க, ஜனாதிபதியின் யோசனைகளை நடைமுறைப்படுத்துவதும் அவசியம்; மனம் மாறிய பயங்கரவாதிகளின் அனுபவங்களை உலகறியப் பிரசாரம் செய்வதும் அவசியம். இவற்றை அரசு யுத்தகால அடிப்படையில் மேற்கொண்டால், யுத்தம் ஏதும் இன்றியே பயங்கரவாதத்தை வெற்றி கொள்ள வாய்ப்பிருக்கிறது. ○

# கதிகலங்கப் போகும் கோடம்பாக்கம்!

தரதரவென்று கையைப் பிடித்து அந்தக் காலத்துக்குக் கூட்டிப்போய், பலருடைய தூக்கத்தைக் கெடுத்து, பரபரப்பான நிகழ்ச்சியாகியிருக்கிறது 'சொக்குதே மனம்'. சனிக்கிழமை இரவுகளில் ஜெயா டி.வி.யில் ஒளிபரப்பாகும் இந்த நிகழ்ச்சியின் நோக்கமே பழைய பாட்டுகளுக்குப் புத்துயிர் கொடுப்பதுதான். கண்டு கொள்ளாமல் விடப்பட்ட பாட்டுகளை பி.ஜி.எம். சேர்த்து ரகளையாக ரசிக்க வைக்கிறார்கள். பாகவதர் காலத்துப் பாட்டிலிருந்து ஹாரிஸ் ஜெயராஜ் பாட்டு வரை பார்ட் பார்ட்டாகக் கழட்டி, புது மெருகோடு கொடுக்கிறது ஓர் இளமை புதுமை டீம்.

"பறக்கும் பந்து பறக்கும்னு ஒரு பழைய பாட்டு இருக்கிறது. அதில் பந்து வர்ற லப்டப் சத்தத்தை அற்புதமாப் பண்ணியிருப்பாங்க. இதையெல்லாம் புது டெக்னாலஜிக்கு மாத்தி ஸ்டீரியோவுல கேட்குற மாதிரி செஞ்சுட்டா புதுப் பாட்டுக்குக் கிடைக்கிற வரவேற்பு மாதிரியே பழைய பாட்டுக்களுக்கும் கிடைக்கும். அதைத்தான் நாங்க செஞ்சிட்டிருக்கோம்'' என்று உற்சாகமாகப் பேசும் ப்ரியா, டிடியில் அடிக்கடி தெரிந்த முகம்.

டிடியில் 'துள்ளாத மனமும் துள்ளும்' புரோகிராம் பண்ணிக் கொண்டிருந்த போது ப்ரியா மனத்தில் ஃப்ளாஷான கான்செப்ட்டாம் இது. நாராயணன், கணபதி, சுந்தர் என நண்பர்கள் உதவிக்கு வர, கலக்க ஆரம்பித்துவிட்டார்கள். ப்ரியாவின் குரலை டி.வி.யில் கேட்டுத்தான் வித்யாசாகர், 'பரமசிவன்' படத்துக்குக் கூப்பிட்டு 'ஆசை, தோசை' பாட்டைக் கொடுத்தாராம். அம்மணி இப்போது சினிமாவிலும் பிஸி. 'எம்.ஜி.ஆர். இல்லம்' படத்துக்காக எம்.எஸ்.வி.யோடு டூயட் பாடியிருக்கிறாராம்.

'ரீமிக்ஸ'ங்கிறது வேற. நாங்க செய்யறது அதே மெட்டு, அதே வரிகளோட சவுண்ட் குவாலிட்டியை அதிகப்படுத்தித் தர்றதுதான். அதனால அந்தப் பழைய டேஸ்ட் மாறாம அப்படியே இருக்கும்'' என்கிறது ப்ரியா அண்ட் குழு.

'வசீகரா' பாட்டை அறுபதுகளில், எண்பதுகளில் பாடியிருந்தால் எப்படியிருக்கும் என்பதையும் லேட்டஸ்டாக டெமோ பண்ணியிருக்கிறார்களாம். சோகப் பாட்டை குத்துப் பாட்டாகவும், குத்துப் பாட்டைச் சோகப் பாட்டாகவும் மாற்றிக் கலக்கப்போவதாகவும் உத்தேசமாம். கோடம்பாக்கத்துக் காரர்கள் கதிகலங்கப் போவது நிச்சயம்!

- ஜெ.ராம்கி

படம் : பொள்ளாச்சி சுந்தரம்



• ப்ரியா

# பாண்டிச்சேரி முதல்வருடன் ஒருநாள்!



**கா**லை ஏழு மணி!

புதுவை தட்டாஞ்சாவடியில் உள்ள காவலர் மைதானம் டென்னிஸ் கோர்ட்டில் வியர்க்க விறுவிறுக்க ஆடிக் கொண்டிருக்கிறார் முதல்வர் ரங்கசாமி. கோர்ட்டுக்கு வெளியே பொதுமக்கள் கையில் மனுக்களுடன் நின்று கொண்டி ருக்கிறார்கள். ஒரு மணி நேர ஆட்டத் துக்குப் பின் உடை மாற்றிக்கொண்டு வந்து தமது யமஹா மோட்டார் பைக்கில் உட்காரும் முதல்வரை மக்கள் சூழ்ந்து கொள்கிறார்கள். கல்லூரி அட்மிஷன், வேலை, ரேஷன் கார்டு, ஆஸ்பத்திரி சேர்க்கை என்று பலவிதமான கோரிக் கைகள். செய்ய முடியும் காரியங்களுக்கு 'ஆபீஸ¬க்கு வந்துவிடுங்கள்' என்று சொல்கிறார். "ரேஷன் கார்டு அவ்வளவு கஷ்டம் இல்லை. அதிகாரிங்க வரும்போது வீட்டிலிருக்கணும்" என்று ஒரு வயதான அம்மாவிடம் சொல்கிறார். முதல்வரின் மோட்டார் பைக் நகரவே முடியாத அளவு கூட்டம் அவரை நெருக்குகிறது. ஒருவழியாக விடுபட்டு தமது வீட்டுக்குச் செல்கிறார் முதல்வர்.

செல்லும் வழியெல்லாம் இருபுறங் களிலும் மக்கள் வரிசை கட்டிக்கொண்டு வணக்கம் சொல்கிறார்கள். வீட்டுக்குள் நுழைந்தால் அங்கேயும் பெண்கள் உட்பட பெரிய கூட்டம் காத்துக் கொண்டிருக்கிறது. "எங்கள் முதல்வர் முன்பிருந்த முதல்வர்களில் இருந்து முற்றிலும் மாறுபட்டவர். யார் வேண்டு மானாலும் எப்போது வேண்டுமானாலும் அவரை அணுகலாம். உதவியாளர், காவலர் கெடுபிடிகள் எதுவும் கிடை யாது" என்கிறார் உடனிருக்கும் நண்பர் குமார். அது உண்மைதான்.

**பொ**து வாழ்க்கையைத் தேர்ந் தெடுத்து விட்டதால், சராசரி வாழ்க் கைக்கு டாடா சொல்லிவிட்டு, தனியாக ஓர் அறையில் வசிக்கிறார் முதல்வர். காலையில் அவர் அறைக்கதவைத் திறக் கும்போதிலிருந்து இரவு பதினொரு மணிவாக்கில் படுக்கப் போகும்வரை கூட்டம் மொய்த்துக் கொண்டிருக்கிறது. தம் அறையில் வந்து தனிமையாகப் பேசும் நண்பர்கள், அரசு அதிகாரிகள் ஆகியோரிடம் நாட்டு நடப்பு, அரசு நிர்வாகம் ஆகியவற்றை நுணுக்கமாகக் கேட்டு வைத்துக்கொள்கிறார். வீட்டி லேயே மக்கள் குறைகளைக் கேட்டு முடிக்க பத்து மணி ஆகிவிடுகிறது.

• புத்தகத்தை வெளியிடும் முதல்வர்...





• அரிசியின் தரத்தைச் சோதிக்கிறார்...

மக்களைப் பார்த்துக் கொண்டிருந்தவர், அப்படியே வண்டியில் ஏற, காத்துக் கொண்டிருந்த காலைச் சிற்றுண்டியும் காரில் ஏற்றப்படுகிறது. கார் உழவர்கரை தாசில்தார் அலுவலகத்துக்கு விரைகிறது. "விபத்து மற்றும், இயற்கையாக குடும்பத் தலைவர்கள் மரணமடைந்தால், அந்தக் குடும்பங்களுக்கு ரூ.50,000 மற்றும் ரூ.25,000 நிவாரணத் தொகை வழங்குகிறோம். தேர்தல் என்பதால் நிறுத்தி வைத்திருந்தோம். இப்போது அது தொடர்கிறது" என்கிறார் முதல்வர்.

2002-ல் புதுவை முதலமைச்சராக இருந்த சண்முகம் அதே பொறுப்பில் தொடர முடியாத நிலை வந்தபோது, காங்கிரஸ் மேலிடம் ரங்கசாமியைத் தேர்ந்தெடுத்து உள்ளூர்ப் பெருந்தலைகளுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. இத்தனைக்கும் ரங்கசாமிக்கு அப்போது அரசியல் பின்புலம் கிடையாது. 1999-ல் இருந்து எம்.எல்.ஏ., பின்னர் விவசாய அமைச்சர், அவ்வளவு தான். ஃபரூக், வைத்தியலிங்கம், நாராயணசாமி இவர்களுக்கு நடுவே பாண்டி பாலிடிக்ஸை வெற்றிகரமாகக் கையாண்டு 2006 தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸ் மேலிடத்துக்குத் தன்னை விட்டால் யாரும் இல்லை என்ற நிலைக்குக் கொண்டு வந்துவிட்டார் ரங்கசாமி.

உழவர்கரை தாசில்தார் அலுவலகத்தில் நிவாரணத் தொகை வழங்கிய பின் அங்கேயே சிற்றுண்டி சாப்பிடுகிறார் முதல்வர். அதன்பின் முதல்வரின் கார் கலவை சுப்பராயலு செட்டித் தெருவிலுள்ள காங்கிரஸ் அலுவலகத்துக்குச் செல்கிறது. "பாண்டி அரசு கொடுத்த பல சலுகைகளைப் பயன்படுத்திக் கொண்டு இங்கு வந்த தொழிற்சாலைகள் பல, இப்போது மூடப்பட்டு விட்டனவாமே!" என்றால், "உண்மைதான். ஆனால் பல புதுத் தொழிற்சாலைகளும் வருகின்றன. சுற்றுச்சூழலுக்கு ஆபத்து உண்டாக்கும் இரசாயன ஆலைகள், அதிக தண்ணீர் தேவைப்படும் தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கு அனுமதி கொடுக்க ரொம்பவே தயங்குகிறோம். இங்கே சேதுராப்பட்டில் சிறப்புப் பொருளாதார மண்டலம் வருகிறது. மோட்டார் உதிரிப் பொருட்கள் மற்றும் தகவல் தொழில் நுட்பம் தொடர்பான நிறுவனங்கள் வர இருக்கின்றன" என்கிறார்.

"சென்ற பதவிக் காலத்தில் உங்கள் சாதனை..?"

"மக்கள் முகங்களைப் பாருங்கள். மலர்ச்சி தெரியவில்லையா? அவர்களிடம் வாங்கும் சக்தி அதிகமாகியிருக்கிறது. புதுவையின் திட்ட ஒதுக்கீடு 410 கோடி ரூபாயிலிருந்து 1410 கோடியாகி இருக்கிறது" என்கிறார். சிக்னலில் காத்திருக்கும் மக்கள் முதல்வருக்குக் கையாட்டி வாழ்த்துச் சொல்கிறார்கள்.

மறுநாள் சட்டமன்றம் கூடுவதால், யுக்திகளைப் பற்றி மாநில காங்கிரஸ் தலைவரிடம் விவாதித்துவிட்டு, நேராகச் சட்டமன்ற வளாகத்துக்குள் உள்ள தமது அலுவலகத்துக்குச் செல்கிறார். அறைக்குள் செல்ல முடியாத அளவு பெரிய கூட்டம் கதவையொட்டி நிற்கிறது. முதல்வரின் இருக்கையையொட்டி ஷீர்டி சாய்பாபா சிலை, பின்னால் பெரிய காமராஜ் படம். கடந்த நான்கு வருட காலத்தில் 18000 பேருக்கு அரசில் வேலைவாய்ப்புக் கிடைத்திருப்பது பெரிய சாதனையாகச் சொல்லப்படுகிறது.

முதல்வர் வந்துவிட்டார் என்று தெரிந்தவுடன் அ.தி.மு.க சட்டமன்ற உறுப்பினர் அன்பழகன், இலவச அரிசிப் பையுடன் புயலென வருகிறார். "பாருங்க அண்ணே எவ்வளவு தரம் குறைந்த அரிசி" என்று கட்டிப்போன அரிசியைக் காண்பிக்க, ஒரு நிமிடம் அசந்த முதல்வர், சுதாரித்துக் கொண்டு பையில் கைவிட்டுப்

பார்க்கிறார். 'கட்டி அரிசிக்கும் உள்ளே உள்ள அரிசிக்கும் வித்தியாசம் தெரிகிறதே' என்று சந்தேகம் கிளம்பவும், விரிவான விசாரணைக்கு உத்தரவிடுகிறார்.

அதன்பின், பொதுப்பணித்துறை, கல்வித்துறை என்று பல துறைகளைச் சேர்ந்த அதிகாரிகளுடன் ஆலோசனை தொடர்கிறது. "குழந்தைகளுக்கான தனி ஆஸ்பத்திரியினை விரைந்து கட்டி முடியுங்கள்" என்று அதிகாரிகளைக் கடிந்து கொள்கிறார். இதற்கிடையில் வேலூர் சாமியார், கிறிஸ்தவ பெண் பாதிரியார்கள் என்று பலர் வருகிறார்கள். "ஒப்பந்த முறையில் இருக்கும் ஆசிரியைகள் எல்லோருக்கும் விளக்கேத்திட்டீங்க. எங்களையும் கவனியுங்க" என்று கோரிக்கை வைக்கிறார்கள். எல்லோரையும் பார்த்து முடிக்க நான்கு மணி ஆகிறது. மதிய உணவுக்குப் பின்னும், மக்கள் சந்திப்பு தொடர்கிறது. வசந்தகுமார் என்பவர் எழுதிய 'உலகமும் பயங்கரவாதமும்' என்ற புத்தக வெளியீட்டு விழாவும் அறையிலேயே நடக்கிறது. சரியாக ஆறு மணிக்குக் கிளம்பி, மீண்டும் காவலர் மைதானம் டென்னிஸ் கோர்ட்டுக்குச் செல்கிறது கார்.

"உங்கள் பெற்றோர் நீங்கள் என்னவாக வேண்டுமென்று விரும்பினார்கள்?"

"பாவம்... அவர்களுக்கு நான் என்ன படித்தேன் என்றுகூடத் தெரியாது. சட்டம் முடித்தேன். அதே தொழிலில் தொடர இஷ்டமில்லை. வாழ்க்கையில் எது எதிர் வருகிறதோ, அதை அப்படியே ஏற்றுக்கொள்கிறேன்" என்கிறார் முதல்வர். சிவாஜி ரசிகன் என்று சொல்லிக் கொள்வதில் இவருக்குப் பெருமை (முதல் சிலை பாண்டியில்தான் அமைந்தது).

"பாண்டியைப் பற்றிய உங்கள் கனவு?"

"வறுமை என்ற பேச்சே இருக்கக் கூடாது."

"சுற்றிலும் எப்போதும் மக்கள். சுதந்திரமே இல்லையே என்று வெறுப்பாகிப் போனதுண்டா?"



• மதிய உணவு...

"பொது வாழ்க்கையை ஏற்றுக்கொண்டபின் வெறுப்புக்கோ, சலிப்புக்கோ இடமில்லை."

டென்னிஸ் ஆடிவிட்டு, சட்டமன்ற உறுப்பினர்களுடன் விருந்து சாப்பிட்டு வீடு திரும்பும்போது இரவு மணி பதினொன்று. அப்போதும் அங்கே பத்துப் பேர் இருக்கிறார்கள். காலை ஆறரை மணிக்கு இருந்த அதே உற்சாகம், மலர்ச்சியுடன் அவர்களிடம் பேசத் துவங்குகிறார் முதல்தவர் ரங்கசாமி.

- ஸ்ரீ

படங்கள்: ராஜன்

• அதிகாரிகளுடன் ஆலோசனை...



# அபாயம் அப்பண்டிசைட்டிஸ்

“இன்றைக்கு என்னிடம் வரும் நோயாளிகளில் பத்தில் ஒருவர் அப்பண்டிசைட்டிஸால் (குடல் வால் அழற்சி) பாதிக்கப்பட்டவராக இருக்கிறார். நாகரிக வளர்ச்சிக்கு மனிதன் கொடுத்துள்ள விலைதான் இந்த அப்பண்டிசைட்டிஸ் நோய்” என்கிறார் சென்னை நுங்கம்பாக்கத்திலுள்ள மெடிந்தியா மருத்துவமனையின் தலைவரும், குடல்நோய்கள் சிறப்பு மருத்துவ நிபுணருமான டாக்டர் சந்திரசேகர். அப்பண்டிசைட்டிஸ் குறித்து அவர் நம்மிடம் விரிவாகப் பேசினார்.

“நமது பரிணாம வளர்ச்சியில் சில உறுப்புகள் மாற்றம் பெற்று வடிவம் மாறுகின்றன. அப்படி மனித வயிற்றுக்குள் செரிமான உறுப்பாக ஆரம்ப காலத்தில் செயல்பட்டு வந்த குடல் வால், இப்போது மனித உடலுக்கு எந்தவிதப் பலனும் தராத பகுதியாகிவிட்டது. ஆனால் சில சமயங்களில் 'நான் இருக்கிறேன்' என்று ஞாபகப்படுத்தியபடி உடலுக்குத் தொந்தரவு கொடுக்க ஆரம்பிக்கிறது.

மனிதனின் குடல்வால் சாதாரணமாக 7 முதல் 10 செ.மீ. நீளம் வரை இருக்கும். ஆணுக்குப் பெண்ணைக் காட்டிலும் சிறிது நீளமாக இருக்கும். இந்த வாலின் உள்ளே ஒரு தீக்குச்சியை நுழைக்கும் அளவு குழாய் இருக்கும். பத்தாயிரம் பேரில் ஒருவருக்குக் குடல் வால் இல்லாமலேயே இருக்கும். சிலருக்கு இரண்டு குடல் வால்கள் இருக்கும். அதிசயமாக வலப்புறம் இருக்க வேண்டிய குடல்வால், இடப்புறமாகவும் காணப்படும். அப்பண்டிசைட்டிஸை இரண்டு விதமாகப் பிரிக்கிறார்கள். ஒன்றை, கொடிய அழற்சி அல்லது திடீர் அழற்சி என்றும், இன்னொன்றை நெடுநாள் அழற்சி என்றும் குறிப்பிடுகிறார்கள். இது இரண்டு வயதுக்குக் கீழ், மிகக் குறைவாக வரும். ஆனால் 20 முதல் 30 வயது வரை உள்ள இளமைப் பருவத்தில் அதிகமாகக் காணப்படுகிறது.

சரி, அப்பண்டிசைட்டிஸ் எப்படி உண்டாகிறது? குடல்வாலின் சிறியதாக இருக்கும் வாய் துவாரத்தை உணவுப் பொருள் அடைத்துக் கொண்டால், குடல் வால் மூடிக் கொள்கிறது. அப்போது அது வாய் தைக்கப்பட்ட ஒரு பைபோல் ஆவதால், அதனுள்ளிருக்கும் ஈகோலை என்ட்ரோ காக்கஸ் மற்றும் ஸ்டெப்போ காக்கஸ் போன்ற பாக்டீரியாக்கள் வளர்ந்து, அதன் சுவருக்குக் கேடு விளைவித்து, அழற்சியை ஏற்படுத்துகின்றன. இதனையே அப்பண்டிசைட்டிஸ் என்கிறோம்.



• டாக்டர் சந்திர சேகர்

சாதாரணமாக குடல்வாலின் வாயை எந்த உணவுப் பொருளும் அடைத்து மூடுவதில்லை. ஏனெனில், அதற்குள் வரும் செரித்த உணவுப் பொருள்கள் திரவமாக இருக்கும். ஆனால் நாகரிக மனிதனின் நவீன உணவுப் பழக்கத்தினால் பிரச்னை உண்டாகிறது. சாக்லெட், கேக், ஜாம், பலவித மாமிச உணவுகள் என்று இயற்கையிலிருந்து வேறு வகையான உணவுப் பழக்கத்துக்கு மனிதன் மாறிவிட்டான். நவீன உணவுகளில் 'செல்லுலோஸ்'

என்னும் பொருள் அறவே இருப்பதில்லை. உணவுப் பொருள்களில் இது இருந்தால், அது நீரை உறிஞ்சி அளவில் பெரியதாகி மலத்தை மிருதுவாக்குகிறது. செல்லுலோஸ் இல்லாதபட்சத்தில் கடினமாகும் மலம், குடல் வாலின் வாயை மூடிவிட, அங்கு அப்பண்டிசைட்டிஸ் உண்டாகிறது.





இதனால் வயிற்று வலி எப்போதும் இருக்கும் என்றாலும், விடியலில் தூங்கி எழும்போது அதிகமிருக்கும். கூடவே மலச்சிக்கலும் உண்டாகும். ஆரம்பத்தில் வலி தொப்புளைச் சுற்றி இருக்கும். சில சமயங்களில் மேல் வயிற்று வலியாகவோ அல்லது வயிறு முழுவதுமோ ஏற்படும். சில மணி நேரம் கழித்து கீழ்ப்புற வயிற்றின் வலதுபுறம் வலி தெரியும். இருமினால் அதிகரிக்கும். சமயங்களில் காய்ச்சல் 100 டிகிரி பாரன்ஹீட் இருக்கும். வாந்தி இருக்கும்.

அப்பண்டிசைட்டிஸ் அதிகமாகும்போது குடல் வாலில் புண், சீழ் ஆகியவை உண்டாகி, வால் பெருத்து கருஞ்சிவப்பாகவும், சில சமயங்களில் இதன் நுனி அழுகியும் போகக்கூடும். இதனால்தான் மருத்துவர்கள் அப்பண்டிசைட்டிஸுக்கு அறுவை சிகிச்சையையே சிபாரிசு செய்கிறார்கள். ஆபரேஷன் இப்போதெல்லாம் மிக எளிதாகி விட்டது. முன்புபோல் வயிற்றைத் திறந்து செய்ய வேண்டிய அவசியமில்லை. நவீன லேப்ராஸ்கோப்பி முறையில் உடனடி நிவாரணம் கிடைக்கிறது. குடல்வால் முற்றிலும் நீக்கப்படுகிறது. இரண்டொரு நாட்களிலேயே மருத்துவமனையிலிருந்து வீட்டுக்குத் திரும்பிவிடலாம். புண்ணாகும் நிலையிலும் நாம் குடல்வாலை அலட்சியப்படுத்தினால் விளைவுகள் விபரீதமாகிவிடும். ஒரு கட்டத்தில் வயிறே வெடித்துவிடக்கூடிய அபாயம் உண்டு.

இதனைத் தடுப்பது நம் கையில்தான் இருக்கிறது. உணவுப் பழக்கத்தில் உடனடியாக மாற்றம் கொண்டு வர வேண்டும். கண்ட கண்ட பேக்கரி உணவுகள், ஹோட்டல் உணவுகளுக்குத் தடா போடுங்கள். நார்ச்சத்து மிகுந்த பழங்கள், காய்கறிகளைத் தவறாமல் அன்றாடம் சேர்த்துக்கொள்ள வேண்டும். இன்று முன்னேறியிருக்கும் நாடுகளின் மருத்துவ வரலாற்றைப் பார்த்தால், சுமார் நூறு வருடங்களுக்கு முன்னால் அப்பண்டிசைட்டிஸ் இப்போ இருப்பதுபோல் அதிகளவில் இல்லை. தொழிற்புரட்சிக்குப் பிறகே, அதிகளவில் உணவில் மாற்றங்கள் ஏற்பட்ட பிறகே, இந்நோய் அதிகரித்திருக்கிறது. எனவே உண்மையை உணர்ந்து உணவின் மூலமே உடலைப் பேணுவோம்" என்கிறார் டாக்டர் சந்திரசேகர்.

**- மனோன்மனோ**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**



# “திருமாவளவன்

**தேர்தல் முடிந்த சில நாட்களில், குடும்பத்தோடு வெளிநாடுகளுக்குச் சென்று விட்டார் டாக்டர் ராமதாஸ். சமீபத்தில் சென்னைக்குத் திரும்பிய டாக்டரைச் சந்தித்தோம்:**

**2001 சட்டமன்ற தேர்தலை ஒப்பிடும் போது சமீபத்திய தேர்தலில் அதிக தொகுதிகளில் போட்டியிட்டும், குறைவான தொகுதிகளில்தான் பா.ம.க. வெற்றி பெற்றிருக்கிறது. இதற்கு என்ன காரணம்?**

“நாங்கள் போட்டியிட்ட தொகுதிகளில் அ.தி.மு.கவினர் பணத்தை வாரி இறைத்தார்கள். எங்கள் தோழமை கட்சியினர் முழு ஒத்துழைப்பு கொடுத்தார்கள். இருந்தும் சில தொகுதிகளில் உள்ளூர் நிலைமைகள் எங்கள் அணிக்கு எதிராக இருந்தன.”

**குறிப்பாக விஜயகாந்த் கட்சியினால் உங்கள் வாக்கு வங்கிக்குப் பாதிப்பு உண்டாகியிருக்கிறதா?**

“எங்கள் வாக்கு வங்கி அப்படியே இருக்கிறது. அது மட்டுமல்லாமல், பா.ம.கவை மக்கள் பொதுவான அரசியல் கட்சியாக ஏற்றுக்கொண்டு நீண்ட காலம் ஆயிற்று. தென் மாவட்டங்களில் எங்களுக்கு கட்சி அமைப்பு சற்று பலமாகவே இருக்கிறது. பத்திரிகையாளர்கள் பழைய நினைப்பிலேயே கேள்வி கேட்கிறார்கள். மேலும் விஜயகாந்த் பற்றிய சிந்தனை அரசியல் தலைவர்களுக்கு இருக்கிறதோ இல்லையோ பத்திரிகையாளர்களுக்கு நிரம்ப இருக்கிறது.” *(சிரிக்கிறார்)*

**தி.மு.க. மைனாரிடி அரசு என்று எதிர்கட்சிகள் சொல்லுகின்றன. இந்த நிலையில் தோழமைக் கட்சிகளான நீங்கள், குறைந்த பட்ச பொதுத் திட்டம் வகுக்கும்படி தி.மு.கவிடம் கேட்பீர்களா?**

“தி.மு.க. அரசு தனது தேர்தல் அறிக்கையில் சொன்னதைச் செய்து வருகிறது. சமீபத்திய பட்ஜெட் கூட சிறப்பாக இருக்கிறது. பல நல்ல பணிகள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன. தமிழில் பெயர் வைத்தால் திரைப்படங்களுக்கு மான்யம் என்பதும் வரவேற்கப்பட வேண்டியது. அதே சமயம் வசனங்களில் ஆங்கில கலப்பு இருக்கக் கூடாது என்றும் நிபந்தனை போடவேண்டும்.... மொத்தத்தில் அருமையான தொடக்கம். இந்த நிலையில் குறைந்தபட்ச பொதுத்திட்டம் வேண்டும் என்று கலைஞர் விரும்புவாரேயானால் பா.ம.க மகிழ்ச்சியுடன் வரவேற்கும். ஆனால் நாங்கள் இதை வலியுறுத்தமாட்டோம்.”

**உள்ளாட்சித் தேர்தல் சட்ட திருத்தத்தால் பா.ம.க பாதிக்கப்படாதா?**

“பாராளுமன்ற, சட்டமன்ற தேர்தல்களில் தொகுதிப் பங்கீடு செய்து கொள்வது போல, உள்ளாட்சித் தேர்தலிலும் எங்களுக்கு உரிய பங்கீடு கிடைக்கும். அந்தப் பங்கீட்டின் அடிப்படையில், தோழமைக் கட்சிகளின் சார்பில் உள்ளாட்சித் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். எனவே எங்களுக்கு எந்தப் பாதிப்பும் உண்டாகாது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். எந்தக் கட்சி ஆட்சியாக இருந்தாலும், உள்ளாட்சிகள் உதாசீனப் படுத்தப்படுகின்றன. அங்கு தலைமைப் பொறுப்புக்கு வருகிறவர்களும் அதன் முக்கியத்துவத்தை உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஒரே வரியில் சொல்வதென்றால் இங்கு உள்ளாட்சித் தத்துவம் வேரூன்றவில்லை என்பதுதான்.”

**உள்ளாட்சித் தேர்தலில், உங்கள் அணியில் புதிதாக யாரும் சேர வாய்ப்பிருக்கிறதா?**

“இப்போதைய நிலையில் அது போன்ற வாய்ப்பு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. இருந்தும் தேர்தல் நெருக்கத்தில் எந்த இயக்கமாவது அணியில் இணைய விரும்பினால் கலைஞர் தலைமையில் கூடி, அது பற்றி முடிவு செய்வோம்.”

**திருமாவளவன் திரும்ப உங்களோடு இணையும் வாய்ப்பிருக்கிறதா?**

# ...திரும்ப வேண்டும்!"

## - ராமதாஸ் அழைப்பு

"திருமாவளவனின் மூன்று முக்கிய கொள்கைகளில் ஜெ. எதிராக இருக்கிறார். ஒன்று தமிழுக்கு எதிரானவர் ஜெ. அடுத்து, ஈழப் பிரச்னையில் சிறுத்தைகளுக்கு எதிரான நிலை எடுத்திருப்பவர் ஜெ. மூன்றாவதாக தலித் நலன்களுக்கு எதிரானவர். இப்போது சிறுதாவூர் மாளிகை விவகாரம் சந்திக்கு வந்து விட்டது. தலித் நிலங்கள் அபகரிக்கப்பட்டிருக்கின்றன. எனவே திருமாவளவன் ஜெயலலிதாவுடன் தோழமையைத் தொடர எந்த முகாந்திரமும் இல்லை. தேர்தல் திருவிழா முடிந்து விட்டது. அதைப் பார்க்கப் போன திருமாவளவன் திரும்ப வரட்டும்."

**எதிர்கட்சித் தலைவராக ஜெயலலிதாவின் செயல்பாடு பற்றி என்ன சொல்கிறீர்கள்?**

"ஜெயலலிதா அரசியலில் இருக்கவே தகுதி படைத்தவர் அல்ல. எம்.ஜி.ஆர் மறைவுக்குப் பிறகு அவரது ஓட்டு வங்கியை அபகரித்துக் கொண்டு அரசியல் பண்ணும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார் ஜெ. அவரது பத்தாண்டுகால ஆட்சி, தமிழகத்தை ஐம்பது ஆண்டு காலம் பின்னோக்கிக் கொண்டு சென்று விட்டது என்பதே உண்மை. இப்போது சிறுதாவூர் பங்களா விசாரணைக் கமிஷன் போடப்பட்டுள்ளது. பொறுப்பான எதிர்கட்சித் தலைவராக இருந்தால், கமிஷன் செயல்பாட்டுக்கு எந்த முட்டுக்கட்டையும் போடாமல், விசாரணைக்கு முழு ஒத்துழைப்பு கொடுக்கட்டும்."

**'தில்லி எய்ம்ஸ்' விவகாரத்தில் மத்திய சுகாதாரத் துறை அமைச்சர் அன்புமணி தலையிட்டது சரிதானா?**

"நான் ஏற்கெனவே சொன்னது போல சமூக நீதிக்கு எதிரான சக்திகள், மீடியாவின் துணையோடு எய்ம்ஸ் அமைப்பில் செயல்படுகின்றன. மத்திய சுகாதாரத் துறையின் கீழ் ஏகப்பட்ட அமைப்புகள் இருக்கின்றன. அங்கேயெல்லாம் நிர்வாகம் அமைதியாக நடக்கும் போது எய்ம்ஸில் சர்ச்சை என்றால் அதற்குக் காரணம் யார் என்பதை நீங்களே புரிந்து கொள்ள வேண்டும்."

**மத்திய அரசு அன்றாடம் தள்ளாடுகிறதே?**

"பல கட்சி கூட்டணி ஆட்சிக்குப் பல சங்கடங்கள் இருந்தாலும், இடது சாரிகளின் ஒத்துழைப்புடன் ஐந்தாண்டு காலம் கட்டாயம் நீடிக்கும்."

- ப்ரியன்



# அக்கறை

சீதாராம்

இரவு அந்த ஐந்து நிமிடங்களுக்கு மட்டும்தான் விஸ்வநாதன் தொலைக் காட்சி முன் அமரலாம் என்பது வீட்டில் எழுதப்படாத சட்டமாகிவிட்டது. தலைப்புச் செய்திகள் அதற்கு முன்னே முடிந்துவிட்டால் உடனே ஒதுங்கிக் கொள்ள வேண்டும். ஒரு நிமிடம் அதிகம் எடுத்துக் கொண்டாலும் தொலைக் காட்சித் தொடர் பித்தான மங்களம் குய்யோ முறையோ என்று கத்தி கணவரை வறுத்தெடுத்துவிடுவாள். அலுவலகத்திலிருந்து அன்று நேரம் கழித்து வந்ததால் அவருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் தொடங்கியிருந்தது. கால் கை கழுவிக் கொண்டு உடை மாற்றிக் கொள்ளாமல், கைக்கடிகாரத்தைப் பார்த்தபடி விஸ்வநாதன் டீவி முன் அமர்ந்து கொண்டார்.

இரவு எட்டுமணி அறிக்கையைக் கேட்டாலே போதும் என்றாகிவிட்டது.

பதினோராம் தேதி ஜூலை இரவுச் செய்தி! மும்பையில் குண்டு வெடித்த அவலக் காட்சிகள் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தன. 'அச்சச்சோ!' என்றவரின் அதிர்வைக் கேட்ட மங்களமும் உடன் வந்து நின்று கொண்டாள். விளைவுகள் தந்த மன நெகிழ்ச்சியுடன் மங்களத்தின் சகோதரனும் அவளது பெற்றோர்களும் அங்கிருக்கிறார்கள் என்ற அதிர்ச்சியும் அவளிடம் கூடியிருந்தது. அவள் சகோதரன் கிருத்திவாசன் மும்பைக்கு மாற்றலாகி, அவர்கள் அங்கு குடியேறி மூன்று மாதங்கள் கூட இன்னும் முடிய வில்லை.

மங்களம் அழவே தொடங்கிவிட்டாள்.

"இரு! இரு! முழுச் செய்தியையும் கேட்கலாம்! அதற்குள் வருத்தப்பட வேண்டாம்!'' மனைவியைச் சமாதானப்படுத்தியபடியே டீவியுடன் விஸ்வநாதன் ஒன்றினார். சில நொடிகளில் அவரிடம் ஒரு நிம்மதி!

" 'நான் நலமாக இருக்கிறேன்! கவலைப்படவேண்டாம்!' என்று பலர் குறுஞ் செய்திகள் தந்த வண்ணம் இருக்கிறார்கள். உன் தம்பி கிருத்தியும் தந்திருக்கிறான். கீழ்ப்புறம் பார்! அவன் செல் நம்பர்தான் அது! கவலைப்படாதே!"

விஸ்வநாதன் குரலில் அந்தச் சமாதானத்தைவிட அனேகர் பட்ட வேதனை அதிகம் கலந்திருந்தது.

"அம்மா அப்பா எப்படி இருக்கிறார்களோ? அவர்களுக்குத் தகவல் தெரியுமோ என்னவோ?" மங்களம் கவலையுடன் பரபரத்தாள்.

"உன் அப்பாவும் அம்மாவும் டீவி முன்தான் அமர்ந்திருப்பார்கள்! எஸ்.எம். எஸ்ஸை அவர்களும் கவனித்திருப்பார்கள். கவலைப்படவேண்டாம்."

"உங்களுக்கு அவர்களை எப்போதும் கேலி செய்வதே வேலை! தம்பிக்கு போன் செய்து பாருங்கள்."

"இந்தக் களேபரத்தில் அழைப்புகள் ஒன்றும் கிடைக்காது. பிசியாகத்தான் இருக்கும். நானும் ஒரு தகவல் அனுப்புகிறேன். உன் தம்பி அது கிடைத்ததும் பதில் அனுப்பலாம்.'' மங்களத்தின் கலக்கம்தான் நீங்கவில்லை.

"அம்மா அப்பாவைப் பற்றியும் விசாரிக்க வேண்டும்?"

"இதோ பார்! அவர்கள் இருக்கும் இடமோ கல்யாண். உன் தம்பி மத்திய ரயில்வே வழியாகத்தான் செல்ல வேண்டும். குண்டு வைத்த இடங்கள் எல்லாம் மேற்கு ரயில்வே பகுதிகளில். அவர்கள் வெளியிலும் போவதில்லை. அதனால் அச்சப்படாதே! வீட்டில் போன் இல்லை. எப்போதோ கொடுத்த பக்கத்து வீட்டு நம்பர்தான். அவர்களும் அடிக்கடி தொந்தரவை விரும்பவில்லை என்று ஒருமுறை சொல்லியிருக்கிறார்கள்."

"நீங்கள் ஏதோ சாக்குபோக்கு கூறித் தட்டிக்கழிக்கிறீர்கள். வெளியூர் அழைப்பு, காசு செலவழிக்க மனமில்லை என்று சொல்லிவிட்டுப் போங்களேன்!"

மங்களம் விசும்பியபடியே நகர்ந்தாள்.

ஒருமுறை செல்லில் முயற்சி செய்தார். கிடைக்கவில்லை. மங்களம் சமாதானம் அடைந்ததாகத் தெரியவில்லை. இருப்புக் கொள்ளாமையில் விஸ்வநாதன்தான் நெளிந்து கொண்டிருந்தார். எப்போது உறங்கினாரோ தெரியவில்லை! வீட்டுப் போன் அடிக்கும் ஓசைதான் அவரை எழுப்பியது. கண்களைத் தேய்த்துக் கொண்டு எழுந்தவருக்கு விடிகாலை மணி ஐந்து என்பது புலனாகியது.

'யார் அழைக்கிறார்கள் இந்த வேளையில்?' என்ற வினா மனதில் கொப்பளிக்க போனை எடுத்தார்.

மாமனார் ராமாமிர்தம் குரல்தான் அந்தப் பக்கம்.

''மாப்பிள்ளை நீங்கள் நலம்தானே?'' அவர் குரலில் சிறிது நடுக்கம்.

விஸ்வநாதனுக்கு ஆச்சரியம்.



"இங்கு ஒன்றும் பிரச்னையில்லை. கிருத்தி செய்தியை டீ.வியில் பார்த்து விட்டோம். வீடு வந்தாகிவிட்டதா?"

"பையன் நேரம் கழித்து வந்து உறங்கிக் கொண்டிருக்கிறான். எங்களுக்கும் அவன் பற்றிய தகவல் இரவே கிடைத்துவிட்டது. நீங்கள் மாதத்துக்கு ஒருமுறை அலுவலக வேலையாய் மும்பை வருகிறீர்களே! இந்தச் சமயத்தில் புறப்பட்டிருப்பீர்களோ என்று இரவு முழுதும் எங்களுக்கு ஒரே கவலை. சரியான தூக்கம் இல்லை. அதனால்தான் முதலில் உங்களை விசாரிக்க வேண்டும்போல் தோன்றியது. விடிகாலையில் தூக்கத்தைக் கெடுத்திருப்பேன். மன்னித்துக் கொள்ளுங்கள்!"

ராமாமிர்தம் குரலில் முன்பிருந்த நடுக்கம் இப்போது குறைந்து மகிழ்ச்சி காணப்பட்டது. விஸ்வநாதன் மனத்தில் மெய்யான நெகிழ்ச்சி!

"சரி! நான் மங்களத்திடம் சொல்லி பிறகு பேசச் சொல்கிறேன்! ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்."

''இல்லை! நான் வெளி பி.சி.ஓ. போனிலிருந்துதான் பேசுகிறேன். பையன் கிருத்தி செல்லில் சார்ஜ் இல்லைபோல் தெரிந்தது. தூங்கிக் கொண்டிருந்த அவனை எழுப்ப மனமில்லை. விடிகாலை நடையைச் சற்று சீக்கிரமே தொடங்கினேன். நல்லவேளை ஒரு கடை திறந்திருந்தது."

மாமனார் குரலில் உற்சாகம் கூடியிருந்தது. சிலையாய் நின்று கொண்டிருந்த விஸ்வநாதன் கையிலிருந்து ஓசைப்படாமல் அருகே வந்து நின்று கொண்டிருந்த மங்களம் ரிசீவரைப் பிடுங்கி தகப்பனாருடன் பேசலானாள்.



• மூலிகைப் பூச்சி விரட்டி அடிக்கும் காட்சி...

# இயற்கை என்றும்

"இந்த மண் நம்முடன் பேசும்... பேசிக் கொண்டே இருக்கும். ஆனால் அதை நாம் யாரும் காதில் போட்டுக் கொள்வதேயில்லை" என வருத்தப்படுகிறார் அந்த இளைஞர்.

"தாகமா? 'தண்ணீர்ப் பாய்ச்சேன்' எனக் கெஞ்சும். மழைக் காலம் வரப் போகிறதா? 'என்னைக் கொத்திப் போடு... உழுது போடு' எனத் தவிக்கும். 'பருவத்தில் என் உடலெங்கும் உயிருள்ள விதைகளை விதைத்து விடு' எனக் கோரும். இந்த மண்ணுக்கும் பசிக்கும் அல்லவா? 'பஞ்ச கவ்யம் தெளி... அமுதக் கரைசல் ஊட்டி விடு' என அடம் பிடிக்கும். இந்த மண், என்னிடம் பேசுகிறது. நான், இந்த மண்ணுடன் பேசிக் கொண்டிருக்கிறேன்" எனக் கூறும் எஸ். ராமவேல், முப்பது வயது இளைஞர். திருமணமானவர். தீவிரத் தன்மையுடன் செயல்பட்டு வரும் இயற்கை வேளாண் விவசாயி.

அவருக்கு, வயல்வெளி வாழ்க்கையிலும் தோள் கொடுத்து வருபவர் அவரது மனைவி ராஜலெக்ஷ்மி. வசித்து வரும் வீட்டுக்குப் பின்புறமே அவர்களது வயல். வீட்டின் வலப்புறத்தில் மாட்டுத் தொழுவம். அதனருகே சாண எரிவாயுத் தொட்டி. இன்னொரு புறம் கீற்றுப் பந்தலின் கீழே மண்புழு உரம் வளர்ப்பு. மாட்டுத் தொழுவத்தில் மூன்று கறவை மாடுகள். பஞ்ச கவ்யம், அமுதக் கரைசல், மூலிகைப் பூச்சி விரட்டி போன்றவற்றைத் தயாரிக்க தனித்தனியே தொட்டிகள். இவை அனைத்துமே இயற்கை விவசாயி ஒருவரின் பண்ணையில் இன்றியமையாதவை எனக் கூறுகிறார் ராமவேல். பதினைந்து வருட அனுபவ விவசாயி அவர்.

கும்பகோணத்துக்கருகிலுள்ள - குத்தாலத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்திருப்பது முருகமங்கலம் கிராமம். அங்கு வசித்து வரும் விவசாயத் தம்பதி ராமவேல் - ராஜலெக்ஷ்மி. தன்னுடைய கணவர், இயற்கை விவசாயம் குறித்து, விரிவாகப் பேசினார், அந்த விவசாய மங்கை.

"எங்களுக்குக் கல்யாணம் ஆகி எட்டு வருசம் ஆவுது. அதுக்கு முன்னாடியிலேர்ந்தே விவசாயம் பார்த்துட்டு வர்றவர் என்னோட வூட்டுக்காரர். அப்பயிலேருந்து ரசாயன உரம் போட்டுத்தான் சாகுபடி செஞ்சு வந்தாங்க. சரியா வெளையாததால கடன் ஏறிக்கிட்டே போனது. அப்பத்தான், என்னோட கணவர் ஈரோடு - சத்தியமங்கலம் பக்கம் போயி இயற்கை வேளாண் விவசாய நிலங்களைப் பார்த்துட்டு வந்தார். அதுதான் எங்களோட வாழ்க்கையில திருப்புமுனையா அமைஞ்சது.





# ...ரயப்பதில்லை!

• ராமவேல் - ராஜலெக்ஷ்மி தம்பதி...

அதுக்குப் பிறகு ஊருக்கு வந்து எங்களோட பத்து ஏக்கர் வயலையும் ஒரே நேரத்தில் இயற்கை வேளாண் விவசாயத்துக்கு மாத்தி அமைச்சோம். அன்னையிலேருந்து எங்க பொருளாதாரத்துல ஏறுமுகம்தான்.'

சராசரி ஓர் ஏக்கருக்கு இரசாயன உரச் செலவு மூவாயிரம் ரூபாய் ஆகுமெனில், இயற்கை உரச் செலவு ரூபாய் முன்னூறுக்குள் அடங்கி விடுகிறதாம்! முருகமங்கலம் ராமவேலின் விளைநிலத்தில் குறுவை மற்றும் தாளடி ஆக, நெல் இரு போக சாகுபடியாகப் பயிரிடப்படுகிறது. குறுவை அறுவடை ஆகஸ்ட் மாத இறுதியில். தாளடி அறுவடை ஜனவரி முதல் வாரத்தில். தாளடி அறுவடையின் பத்து நாட்களுக்கு முன்பாக, அதே வயலில் கோடை காலப் பயிராக உளுந்து விதைக்கப்படும்.

**நா**ம் நேரில் சென்றிருந்த சமயத்தில், அவரது வயலில் மூலிகைப் பூச்சி விரட்டி தெளிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. கால்நடைகள் தின்னாத எருக்கு, ஊமத்தை, நொச்சி, ஆடாதொடை மற்றும் பீநாறிச்சங்கு இலைகளைப் போட்டு கோமியத்துடன் (மாட்டு மூத்திரம்) இடித்து அரைத்துத் தயாரிக்கப்படும் திரவமே மூலிகைப் பூச்சி விரட்டி. பயிர்களுக்குத் தீமை செய்யும் பூச்சிகளை விரட்டி விடும் இது பயிர்களைக் காத்துக்கொள்ள, இயற்கையின் வரப்பிரசாதம்!

இரசாயன உரமிட்ட வயலின் ஓர் ஏக்கர் நெல் அறுவடை, அதிக பட்சம் இரண்டு டன்னுக்குள் மட்டுமே. ஆனால், ராமவேலின் வயலில் இயற்கை விவசாயத்தில் ஒற்றை நாத்து முறை சாகுபடியில் ஓர் ஏக்கருக்கு மூன்று டன் நெல் அறுவடை ஆகியுள்ளது. இன்றைய சூழ்நிலையில் இது ஒரு சாதனை எனச் சொல்லப்படுகிறது.

"இனி, இயற்கை வேளாண் முறைகளை என்னிலிருந்து பிரிக்கவே முடியாது. இந்த அறுவடை மிகவும் அதிகபட்சம் என்கிறார்கள். ஆனால், இது மட்டுமல்ல என்னோட இலக்கு. கரிகாலன் கட்டிய கல்லணையில் உள்ள ஒரு கல்வெட்டில், அவன் ஆட்சி புரிந்த காலத்தில் ஒரு வேலிக்கு ஆயிரம் கலம் (500 மூட்டை) நெல் விளைந்ததாகக் குறிப்பு இருக்கிறது. அதாவது ஓர் ஏக்கரில் நாலரை டன் நெல் அறுவடை ஆகி இருக்கிறது. அக் கல்வெட்டுக் குறிப்பினை, மெய்ப்பித்துக் காட்ட வேண்டும் என்பதே என் குறிக்கோள்!" என்று உறுதியாகக் கூறுகிறார் ராமவேல்.

கட்டுரை, படங்கள் : **திருநாவு**



# பட்டுக்கோட்டை பிரபாகர்

படம் : ஸ்ரீஹரி

## அதிர்ஷ்டம்

அவித்த சோளத்தைக் கடித்துச் சாப்பிட்டபடி தீர்மானமாகப் பதில் சொன்ன மஞ்சரி கம்ப்யூட்டர் திரையில் பார்த்து விசைப்பலகையில் விரல்களைக் குதிக்கவிட்டாள்.

தூணில் சாய்ந்து அமர்ந்திருந்த சிவா காய்ந்த துணிகளை மடித்துவைத்துக் கொண்டிருந்த தன் மனைவியைப் பார்த்தான்.

"என்ன அம்சா, இவ இவ்வளவு பிடிவாதமா பேசறா?"

"எல்லாம் நீங்க கொடுக்கற செல்லம்தான் இப்படி எடுத்தெறிஞ்சு பேச வைக்குது. தஸ்சு புஸ்சுன்னு நாலு வார்த்தை இங்கிலீஷ்ல பேசக் கத்துக்கிட்டா உலகமே தெரிஞ்சிடுச்சின்னு அர்த்தமா? இவன்தான் மாப்ளை, இதான் தேதி, வந்து மனையில உக்காருன்னு உத்தரவா சொல்றீங்களா, அதை விட்டுட்டு என்னம்மா சொல்றே, ஏதும்மா சொல்றேன்னு கெஞ்சிட்டிருக்கீங்களே..." என்றாள் அம்சா.

"அண்ணி, எனக்கு உலகமே தெரியும்னு உங்ககிட்ட சொன்னனா?"

"பின்ன அப்படித்தானே நடந்துக்கறே? இப்ப உன்னைக் கிணத்துலயா குதிக்கச் சொன்னாங்க, கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு உனக்கு என்ன வலிக்குதுன்னு கேக்கறேன்."

"அய்யோ, கடவுளே!" என்று நெற்றியில் அடித்துக்கொண்ட மஞ்சரி, "உங்களுக்கு எப்படிப் புரிய வைக்கிறதுன்னு தெரியலை. இப்ப நான் இந்த வீட்டுக்குப் பாரமா இருக்கேனா, எதுக்கு அவசரமா வெளில தள்ளணும்னு துடிக்கிறீங்க?" என்றாள்.

"என்னம்மா பேச்சு இது? கல்யாணம் பண்ணிக்கிற வயசுதானே உனக்கு? அதது அந்தந்த வயசுல நடக்க வேணாமா?" என்றான் சிவா.

"உங்க பழைய சம்பிரதாயம் எல்லாம் மாறிப் போச்சிண்ணா. தயவு செஞ்சு புரிஞ்சுக்கங்க..." என்றாள் அம்சா.

வாசலில் வந்து நின்ற கார் உரையாடலைக் கத்தரித்தது. மூவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

அந்த அம்பாசிடரிலிருந்து இறங்கிய மனிதர் கையிலிருந்த விலாசத்தையும் கதவில் எண்ணையும் சரிபார்ப்பதைக் கவனித்து சிவா எழுந்து வெளியே வந்தான்.

"அய்யா, யாருங்க வேணும்?" என்றான் சிவா.

"இங்க சிவாங்கறது..."

"நான்தான். என்ன விஷயம்?"

"என் பேரு வெள்ளியங்கிரி. பாண்டிச்சேரிலேர்ந்து வர்றேன். என்னோட மேரேஜ் பீரோல உங்க தங்கச்சி மஞ்சரியோட ஜாதகத்தைப் பதிவு செஞ்சிருந்தீங்க இல்லையா, அது சம்பந்தமா பேசணும்."

"உள்ள வாங்க" பரபரப்பு காட்டிய சிவா அவருக்கு முன்பாக உள்ளே சென்று பிளாஸ்டிக் நாற்காலியை எடுத்துப் போட்டு மின்விசிறியை ஓடச் செய்துவிட்டு, "அம்சா, முதல்ல சாருக்குத் தண்ணி குடு. அய்யா



டீ சாப்பிடுவீங்களா?'' என்றான்.

"இருக்கட்டும். நான் சொல்லப் போற தைக் கேட்டதுக்கப்புறம் வடை பாயா சத்தோட எனக்கு விருந்தே வைக்க ணும்னு ஆசைப்படுவீங்க'' என்றபடி அமர்ந்த வெள்ளியங்கிரி, கவரோரமாக மரியாதையுடன் நின்றிருந்த மஞ்சரியைப் பார்த்து, "நீதான் மஞ்சரியாம்மா? உன்னை அதிர்ஷ்ட தேவதையோட வாரிசுன்னு கூட தாராளமா சொல்லலாம்."

"என்ன சொல்றீங்க, புரியலையே?'' என்றான் சிவா.

''சஸ்பென்ஸ் எல்லாம் வைக்காம சட்டுன்னு சொல்லிடறேன். பாண்டிச் சேரில தங்கத் தோட்டம் கடைக்குப் போயிருக்கீங்களா?''

ஒரு பித்தளை சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து நீட்டினாள் அம்சா.

"உனக்கு நாத்தனார்தானே மஞ்சரி?''

"ஆமாம்.''

"நீங்க எல்லாரும் சம்மதிச்சா மஞ்சரி அந்தக் கடை முதலாளிக்கு மருமகளாகிற வாய்ப்பு இருக்கு.''

''என்னங்க விளையாடறீங்களா? அவங்க எங்க! நாங்க எங்க!''

''அதைப் பத்தியெல்லாம் எதுவும் யோசிக்க வேணாம். அந்தக் கடை முத லாளி பரமேஸ்வர் பணத்துக்கு மதிப்பு கொடுக்கறவரில்லை. ஒரு சாதாரண குடும்பத்துலேர்ந்து ஒரு குணவதி மருமகளா வந்தாப் போதும்னு நினைக் கிறவர். என் நண்பர்தான். அவருக்கு ஒரே பையன். அந்தப் பையனோட ஜாதகமும்



2

உங்க தங்கச்சியோட ஜாதகமும் நல்லா பொருந்தியிருக்கு. போட்டோ பாத்துட்டு அவங்களுக்கும் பரம திருப்தி. பையன் கொஞ்ச நாள் போகட்டும்னு சொல்லிட்டிருந்தான். இப்ப அவனும் சரின்னுட்டான். உங்களுக்கு எப்ப சௌகரியம்னு சொன்னா, முறையா இங்க வந்து பொண்ணு பாத்து நிச்சயம் பண்ணிக்கு வாங்க. என்ன சொல்றீங்க?"

மூவருமே சில விநாடிகள் பிரமிப்பு மாறாமல் வாயடைத்துப் போய் நின்றார்கள்.

சுதாரித்துக் கொண்ட சிவா, "அய்யா, அவ்ளோ பெரிய எடத்துல சம்பந்தங் கறதை எங்களால நினைச்சுக்கூட பாக்க முடியாதுங்க. அந்தஸ்து பாக்காம முடிவு பண்ற பெருந்தன்மை அவங்களுக்கு இருக் கலாம். ஆனா தகுதிக்கு மீறி ஆசைப்படறது ரொம்பத் தப்புங்க. நீங்க எங்க நிலைமைக்கு ஏத்த இடமா இருந்தா சொல் லுங்க." என்றவன் திரும்பி, "என்ன அம்சா, நான் சொல்றது சரிதானே?" என்றான்.

மௌனமாகத் தலையசைத்த அம்சா, "நீங்க சொல்றது நியாயம்தான். ஆனா உங்க தங்கச்சிக்கு இப்படி ஒரு அதிர்ஷ் டம் வீடு தேடி வந்திருக்கிறப்ப அவசரமா மறுத்துடாம கொஞ்சம் யோசனை பண்ணி பதில் சொல்லலாம்னு எனக்குத் தோணுதுங்க" என்றாள்.

"தம்பி, உங்க வீட்டுக்காரம்மா சொல்றது சரியான பேச்சு. இதுவே அந்த வீட்லேர்ந்து பொண்ணு எடுக்கறதா இருந்தா நிறைய யோசிக்கிறது நியாயம். உங்க தங்கச்சிக்கு இந்தச் சம்பந்தம் ஒரு அதிர்ஷ்டப் பரிசு விழுந்த மாதிரிதான். இந்தக் கல்யாணத்துல உங்களுக்கு ஒரு செலவும் இருக்காது. அதே சமயம் உங் களுக்கு உண்டான மரியாதையிலயும் ஒரு குறையும் இருக்காது" என்று எழுந்தவர், "நல்லா யோசனை பண்ணிட்டு எனக்கு போன் பண்ணுங்க. மறந்துட்டனே, நீங்களும் முன்கூட்டியே பையனோட போட்டோவைப் பாக்கறதுதான் நியா யம்னு பரமேஸ்வர் கொடுத்தனுப்பிச்சார்" என்று கைப்பையிலிருந்து குமரனின் புகைப்படம் எடுத்துக் கொடுத்தார் வெள்ளியங்கிரி.

கைகூப்பிவிட்டு வெளியே நடந்த அவரை, காரில் ஏறி புறப்படும்வரை நின்று வழியனுப்பிவிட்டு உள்ளே வந்த சிவா, அந்தப் புகைப்படத்தைப் பார்க்க... அம்சா வும் எட்டிப் பார்த்தாள்.

"என்னங்க, பையன் ராஜா மாதிரி இருக்கான்ங்க. ரெண்டு பேருக்கும் ஜோடிப் பொருத்தம் அமோகமா இருக் கும். நிஜமாவே நம்ம மஞ்சரி ரொம்ப அதிர்ஷ்டக்காரிங்க" என்றாள் அம்சா.

"என்ன நீ... முடிவே பண்ணிட்ட மாதிரி பேசறே?"

"அவர்தான் அவ்வளவு விவரமா அவங்களைப் பத்தி சொன்னாருல்ல... இதுல நாம யோசிக்கிறதுக்கு எதுவும் இல்லைங்க. மஞ்சரி ராணி மாதிரி வாழப் போறாங்க. முதல்ல அவகிட்ட போட்டோவைக் காமிங்க."

அமைதியாக நின்றிருந்த மஞ்சரியிடம் போட்டோவைக் கொடுக்க, விழிகளைத்

> "இந்த பேங்க்ல ஒரு கேஷியர் வேணும்னு தேடிக்கிட்டு இருக் காங்க."
>
> "ஏன் ஒருத்தர் இருந்தாரே."
>
> "அவரையும் தேடிக்கிட்டு இருக்காங்க."
>
> - ஆர்.எஸ்.பாபு.

தாழ்த்திப் பார்த்தாள். நிமிர்ந்தாள்.

"நீ என்னம்மா நினைக்கிறே? உன் பதில்தான் முக்கியம்!" என்றான் சிவா.

"எனக்கு என்ன பதில் சொல்றதுன்னு தெரியலை"

"நீ வேணாம்னு சொல்றதுக்கு ஒரு காரணமும் இல்லையேம்மா.. ஒரு பெரிய நகைக் கடையே உன்னைத் தேடி வந்திருக்கு. முதல்ல விளக்கேத்தி சாமி கும்பிடும்மா" என்றாள் நெகிழ்ச்சியுடன் அம்சா.

மஞ்சரி மீண்டும் ஒருமுறை குமரனின் புகைப்படத்தைப் பார்ப்பதைக் கவனித் தான் சிவா.

அந்த ஜிம்மில் ஓடுகிற தளத்தின் மேல் நின்றபடி நடந்து கொண்டிருந்தான் குமரன். சுற்றிலும் உடற்பயிற்சிக்கான வித விதமான இயந்திரங்களில் பல இளை ஞர்கள் சுறுசுறுப்பாகப் பயிற்சிகளில் ஈடு பட்டிருந்தார்கள்.

தன்னருகில் வைத்திருந்த செல்போன் ஓசையில்லாமல் அதிர்ந்து நகர்வதைக் கவனித்த குமரன் இயந்திரத்தை அணைத்துவிட்டு கீழே இறங்கினான். எடுத்து காதில் வைத்தான்.

"சொல்லு பிரபு, எங்கேர்ந்து?"

"சென்னைலேர்ந்து" என்றான் எதிர்முனையிலிருந்து பிரபு.

"வாவ்... நியூயார்க், நீ இல்லாம டல்லடிக்குமே. என்ன திடீர்னு?"

"ஏதோ ஒரு முழம் மஞ்சள் கயிறு கழுத்தில கட்டினா கூடவே ஒரு அழகான பொண்ணை அனுப்பி வைக்கிறோம்னு சொன்னாங்க. அதான், புறப்பட்டு வந்துட்டேன்."

"ஏய், கங்கிராட்ஸ்! எப்போ மேரேஜ்? யார் பொண்ணு?"

"இனிமேதான் வேட்டையை ஆரம்பிக்கணும். ஆமா உனக்கு மேரேஜ் செட்டிலா



யிருக்குன்னு ப்ரதீப் சொன்னான். நிஜமாவா?"

"ஆமாம். இன்னும் ஒன் மன்த் இருக்கு மேரேஜுக்கு. என் மேரேஜ்ல கலந்துக்கிட்டு அப்பறமா நீ ஸ்டேட்ஸ் போலாம். ஓ.கே?"

"கண்டிப்பா. ஆனா அன்னிக்கு நீ எடுத்த சபதமெல்லாம் பைத்தியக்காரத்தனமா ஆயிடுச்சில்ல? இதான் காலத்தோட மேஜிக். எதையும் மறக்கடிச்சிடும்."

"அப்படியில்ல பிரபு. சில விஷயங்களை நினைச்சுப் பாக்காம தவிர்க்க முடியும். ஆனா மனசுலேர்ந்து எதையுமே மறக்க முடியாது."

"நான் ஒத்துக்கமாட்டேன். புதிய நினைவுகள் கவர்ச்சியா இருந்தா பழைய நினைவுகள் புதைஞ்சு போயிடும். அது எந்த இடத்துக்கு எது புதுசா வருதுன்றதைப் பொருத்தது. ஆமாம், பொண்ணு யாரு? அதைச் சொல்லு."

"பேரு மஞ்சரி. ஊர் மயில்பட்டி. டிகிரி படிச்சிருக்கா. நிச்சயதார்த்தம் முடிஞ்சிடுச்சு."

"பூஜாவைவிட அழகா இருப்பாளா?"

"பிரபு, வேற பேசவோமே ப்ளீஸ்... எப்ப பாண்டி வர்றே?"

"நழுவறே. புரியுது. அடுத்த வாரம் பிளான் பண்றேன். பை!"

தொடர்பைத் துண்டித்த குமரன், யோசனையோடு கார் சாவியை எடுத்துக்கொண்டு மெதுவாக நடந்தான்.

'பூஜாவைவிட அழகா இருப்பாளா? பூஜாவைவிட அழகா இருப்பாளா? பூஜாவைவிட அழகா இருப்பாளா?'

பூஜா! பூஜா! பூஜா!

"குமரன், நம்ம கல்யாணம் நடக்கலைன்னா செத்துடுவேன்"

"ஏன் லூசு மாதிரி பேசுறே? நம்ம கல்யாணம் நடக்காம போறதுக்கு ஒரு காரணமும் இல்லை."

"எத்தனை குழந்தை பெத்துக்கலாம்?"

"நீயே சொல்லு."

"மீசையோட ரெண்டு. மீசையில்லாம ரெண்டு."

"அசடு. எல்லாக் குழந்தையும் மீசையில்லாமதான் பொறக்கும்"

"ஆனா குமரன், என்னமோ ஒண்ணு நடந்து நம்ம கல்யாணம் நடக்காம போயிடுமோன்னு அப்பப்போ ஒரு குட்டி பயம் எட்டிப் பாக்குது."

"இது லவ் பண்ற எல்லாருக்கும் வர்ற வியாதிதான். லவ்வோபோபியான்னு பேரு. இதுக்கு மருந்து இருக்கு. இந்தப் பயம் மனசுக்கு வர்றப்பல்லாம் சட்டுன்னு ஒரு முத்தம் கொடுக்கணுமாம். கமான்."

"ஏய்..."

அந்த ஜிம்மைவிட்டு வெளியே வந்து தனது காரை நெருங்கினான் குமரன். அவன் காரின் அருகில் ஒரு பைக் கீழே விழுந்திருக்க, அருகில் நின்றிருந்தவன், "வாய்யா. இந்தக் காரு உன்னோடது தானே? இங்க நிறுத்தியிருந்த என் வண்டியை நீ பாட்டுக்கு இடிச்சுத் தள்ளிட்டு நிமிர்த்திக்கூட வைக்காம உள்ள போய்ட்டே? காசுத் திமிருதானே?" என்று குமரனின் சட்டையைப் பிடித்தான்.

(தொடரும்)

கொல்கத்தா, ஆகஸ்ட் 5 : 'இந்திய அணிக்கு எதிராகப் புரட்சி அணியை உருவாக்கப் போகிறேன்' என அணியின் எக்ஸ் சர்வீஸ்மேன் சவுரவ் கங்குலி தெரிவித்துள்ளார்.

"உலகக் கோப்பைக்கான கிரிக்கெட் போட்டிகள் அடுத்த ஆண்டு மார்ச் - ஏப்ரல் மாதங்களில் வெஸ்ட் இண்டீஸில் வைத்து நடைபெற உள்ளது. இதற்காக ஒவ்வோர் அணியும் திட்டமிட்டுச் செயல்பட்டுவருகின்றன. கடந்த சில வருடங்களாக இந்தியாவைத் தவிர மற்ற ஏனைய ஏ, பி முதல் எக்ஸ், வொய், இஸட் அணிகளுக்காக மட்டுமே வேறு வழியின்றி விளையாடி வரும் கங்குலி, நேற்று நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.



# புரட்சி அணியை உருவாக்குவேன்!

## கங்குலி பேட்டி

'சமீபத்தில் வெஸ்ட் இண்டீஸுக்கு எதிராக நடந்த தொடரில் விளையாட, யாருமே என்னை அழைத்துச் செல்லவில்லை என்பதில் எனக்கு மனம் நிறைய வருத்தம்தான். வெஸ்ட் இண்டீஸுக்கு விளையாடப் போகிறோம் என ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் சென்றதில் அதை விட வருத்தம்.

அந்தத் தொடரில் என்னைப் போல் சச்சினும் விளையாடாமல் இருந்ததுதான் எனக்குக் கிடைத்த ஒரே ஆறுதல். இதே உச்சத்தை டிராவிடும் அடையும் நாளைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

காலத்துக்கு ஏற்ப பயிற்சி முறைகளை மாற்றுவதில் தவறே இல்லை. அதற்காக, காலத்துக்கு ஏற்ப அணி வீரர்களையும் மாற்றிக்கொண்டே இருப்பதில்தான் எனக்கு உடன்பாடில்லை. இதை மனத்தில் கொண்டு ஒரு புரட்சிகரமான திட்டத்தைச் செயல்படுத்த உள்ளேன்.

உலகக் கோப்பைப் போட்டிகளுக்கு முன் போதுமான அளவு ஒருநாள் போட்டிகளில் இந்திய அணி பங்கேற்கிறது. இதன் மூலம் பலவீனமான வீரர்கள் என சிலர் மீது முத்திரையிட்டு அரசியல் செய்து அணியிலிருந்து வெளியேற்றுவார்கள்; அவர்களை ஒன்றிணைத்து இந்திய அணிக்கு எதிராக 'எதிர் இந்திய அணி' என்றொரு புரட்சி கிரிக்கெட் அணியை உருவாக்கலாம் என்றிருக்கிறேன்.

காம்ளியோ, அசாருதினோ, ஏன் சச்சினோ கூட நான் கேப்டனாக இருக்கும் இந்த அணியில் இணைந்து கொள்ளலாம். வயது வரம்பு ஏதும் கிடையாது. காயங்கள் பற்றியும் கவலையில்லை. எனது புரட்சி அணி வரும் உலகக் கோப்பையில் பங்கேற்க முயற்சி செய்யும்."

இவ்வாறு கங்குலி கூறினார். தான் எப்போதும் விளையாடத் தயார் என்பதை வலியுறுத்தும் விதமாக க்ளவுஸ், ஹெல்மெட் எல்லாம் அணிந்தபடியே கையில் பேட்டுடன் பேட்டி கொடுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

**பொய், பொய்யைத் தவிர வேறில்லை!**






# சிவசக்தி தத்துவம்!

அன்பெனும் மழையிலே... மாதா அமிர்தானந்தமயி

இந்தப் பிரபஞ்சத்தில் ஆணுக்கும், பெண்ணுக்கும் சரிசமமான இடம் உண்டு. ஒரு மனித உடலில் தலை முதல் கால் வரை சரிபாதியாகப் பிரித்தால், இரண்டு பகுதிகளும் சரிசமமாக இருக்கும். அதே அளவுக்குச் சமுதாயத்தில் ஆணுக்கும், பெண்ணுக்கும் சரிசமமான முக்கியத் துவம் உண்டு. ஆணின் இடப் பாகம் பெண் என்றால், பெண்ணின் வலப் பாகம் ஆண் என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை. ஆண், பெண் வேற்றுமை எல்லாம் உடல் அமைப்பில் மட்டும்தான். சமுதாயத்தில் ஓர் ஆணுக் குத் தரப்படும் அதே இடமும் முக்கி யத்துவமும் ஒரு பெண்ணுக்குக் கிடைக்

காது. அதில் குறை ஏற்படும்போது சமுதாயத்தின் சமநிலையில் பாதிப்பு ஏற்படுகிறது.

ஒரு பெண், ஆணுக்குரிய இடத்தை அடைய முயல்வதும், ஆண்கள், பெண்களைத் தங்களுடைய அதிகாரத்துக்குக் கொண்டுவர முயற்சி செய்வதும், தனிநபர் வாழ்க்கையிலும், சமுதாயத்திலும் அதிருப்தியையும், அமைதியின்மையையும் வளர்க்கும்.

ஒரு வாகனத்தின் இடப் பக்கச் சக்கரத்துக்கு எந்த அளவு முக்கியத்துவம் உண்டோ அதே அளவு முக்கியத்துவம் வலப் பக்கச் சக்கரத்துக்கும் உண்டு. இரண்டு சக்கரங்களும் ஒரே சமயத்தில் முன்னோக்கிச் சுற்றினால் மட்டுமே பயணம் செய்பவன் குறிப்பிட்ட இடத்தை அடைய முடியும். அது போலவே, குடும்ப வாழ்விலும் கணவனும் மனைவியும் ஒற்றுமையுடன் வாழ்ந்தால் மட்டுமே சரியான இலட்சியத்தை அடைய முடியும்.

பாரதப் பண்பாட்டில் பெண்களுக்கு மதிப்புக்குரிய இடம் அளிக்கப்பட்டுள்ளது. "மாத்ரு தேவோ பவ" என்னும் வாசகமே, பாரதம் உலகுக்கு அளிக்கும் செய்தியாகும். பிற பெண்களை, தாயாகக் காணவேண்டும் என்று நமது பண்பாடு கற்பிக்கிறது. ஒவ்வோர் ஆண்மகனும், தான் பிறப்பதற்கு முன் பத்து மாதங்கள் தன்னுடைய தாயின் கர்ப்பத்தில் இருக்கிறான். அதனால், விவேக புத்தியுள்ள ஓர் ஆணால், தனது தாயின் இனமான பெண்குலத்தை மரியாதைக் குறைவாகவும் தாழ்வாகவும் கருத முடியாது; அலட்சியப்படுத்த முடியாது.

பெண்தான் ஒரு குடும்பத்தின் அஸ்திவாரம். ஒரு குடும்பத்தில் அமைதியும், செழிப்பும் நிலவ, ஆணைவிட பெண் மிகவும் முக்கியம். காரணம், பெண் அன்பின், பொறுமையின், பணிவின் இருப்பிடமாவாள். இந்தப் பண்புகளே, குடும்ப உறுப்பினர்களிடம் ஒற்றுமையை வளர்க்கின்றன; அன்பைப் பெருக்குகின்றன.

ஒரு சிலர் "மனு தர்மத்தில், பெண்ணைச் சிறுவயதில் தந்தையும், வாலிபப் பருவத்தில் கணவனும், முதிய வயதில் மகனும் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. இதன் மூலமாகப் பெண்ணுக்குச் சுதந்திரமாக வாழ அனுமதி கிடைக்காமல் போகிறது" என்று சொல்கிறார்கள். இது மிகவும் தவறான கருத்து. மனு தர்மத்தில் கூறப்பட்டுள்ளதன் உண்மையான பொருள், ஒரு பெண் எக்காலத்திலும் பாதுகாக்கப்படத் தகுதிவாய்ந்தவள் என்பதுதானேயன்றி பெண்ணுக்குச் சுதந்திரம் மறுக்கப்படுகிறது என்பது அல்ல. பெண்ணைப் பாதுகாக்கும் பொறுப்பு எல்லாக் காலத்திலும் ஆணுக்கு உள்ளது.

பெண்ணுக்கு யாரும் சுதந்திரம் அளிக்க வேண்டியதில்லை. அவர்களும் ஆண்களைப் போல சுதந்திரமானவர்களே. அதே சமயம், அவர்களைப் பாதுகாக்கும் கடமை ஆண்களுக்கு இருக்கிறது. பெண்ணுக்குச் சுதந்திரத்தை அளிக்க மறுக்கும் எந்தச் சமுதாயமும் தனது அழிவைத் தானே தேடிக் கொள்கிறது.

மனு ஸ்மிருதியை மேற்கோள் காட்டி சிலர் விமர்சிப்பதைப் பார்க்கும்போது, அம்மாவுக்கு ஓர் உதாரணம் நினைவுக்கு வருகிறது. இன்று நாட்டில் உள்ள மந்திரிகள் அனைவரும் பலத்த பாதுகாப்புடன்தான் எங்கும் வலம் வருகிறார்கள். காவலர்கள் கூடவே இருப்பதால், மந்திரிகளுக்குச் சுதந்திரம் இல்லை என்பது பொருளா? காவலர்கள் எப்போதும் கூட இருந்த போதிலும் மந்திரிகளுக்கு பூரண சுதந்திரம் உண்டு. அவர் எங்கு வேண்டுமானாலும் செல்ல முடியும். அதே சமயம் அவர் எங்கு சென்றாலும், அவர் கூடவே சென்று அவரைப் பாதுகாக்க வேண்டிய கடமை காவலர்களுக்கு உண்டு.

அது போலத்தான், பெண்ணுக்கு முழு சுதந்திரம் அளித்திருக்கும் நமது சமுதாயம், அவளை எந்த ஓர் ஆபத்திலிருந்தும் காப்பாற்றும் பொறுப்பை

ஆண்களுக்கு வழங்கி உள்ளது. காரணம், பெண் குடும்பத் தலைவி; அதன் மூலமாகச் சமுதாயத்தின் ஒளி விளக்கு.

ஆண் - பெண் சமத்துவம் பற்றிப் பேசுகிறபோதே, உடல் ரீதியாக ஆண் - பெண் சமத்துவம் என்பது இயலாத செயல். மனதை எடுத்துக் கொண்டாலும், பெண்ணிடம் ஓரளவு ஆண்மையும், ஆணிடம் ஓரளவு பெண்மையும் இருக்கிறது. பெண் கண் மூடித்தனமாக ஆணைப் பின்பற்றக் கூடாது. வெளி விஷயங்களான சூதாட்டத்திலும், மது அருந்துவதிலும், புகை பிடிப்பதிலும் ஆண்களைப் போல நடந்து கொள்ள முயற்சி செய்வதன் மூலமாகப் பெண்மைக்கே அவள் சவக்குழி தோண்டுகிறாள்.

பெண் சுதந்திரம் என்ற பெயரில் இன்று பல பெண்கள் தங்களுடைய குடும்பக் கடமைகளிலிருந்து விடுபட விரும்புகிறார்கள். பொறுப்பற்ற, அளவுக்கு அதிகமான சுதந்திரம், உலக இன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்னும் ஆசையைத்தான் வளர்க்கிறது. தம்பதிகள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளும் குடும்பத்தில் அமைதி எப்படி நிலவும்? அதே சமயம் அன்போடும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடனும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு வாழும்போது, அங்கே ஆண் - பெண் சமத்துவத்துக்கும் மேலான ஐக்கியம் ஏற்படுகிறது. அது சிவ சக்தி ஐக்கியம் ஆகிறது. அதுதான் ஆனந்த உலகம். அங்கே ஒருவரின் குறைகளை மற்றவர் பொறுத்துக் கொள்கிறார். ஒருவரது கோபத்தை மற்றவர் தனது அன்பால் நீக்குகிறார். சஞ்சல புத்தியைச் சகிப்புத் தன்மையால் கடந்து செல்கிறார். இங்குதான் இருவரும் உண்மையான சுதந்திரத்தை அனுபவிக்கிறார்கள்.

(அன்பு பெருகும்)



# அம்மா!

ஆசிரமம் ஆரம்பித்த கால கட்டத்தில், ஒரு பிரம்மச்சாரி சில ஆன்மிகப் புத்தகங்களைப் படிக்க விரும்பினார். ஆனால், ஆசிரமத்தில் அதற்கு வசதி இல்லை. அப்போது எதேச்சையாக ஓர் அறிவிப்பு அந்தப் பிரம்மச்சாரியின் கண்களில் பட்டது. சில புத்தகங்களைப் பரிசாக அளிக்கும் பரிசுச் சீட்டுத் திட்டம் பற்றிய அறிவிப்பு அது. அந்த அறிவிப்பைக் கண்ட பிரம்மச்சாரி, அம்மாவிடம், அந்தப் பரிசுச் சீட்டை வாங்கி அதன் மூலம் புத்தகங்களைப் பரிசாகப் பெற, தான் விரும்புவதாகவும் எந்த எண் கொண்ட பரிசுச் சீட்டை வாங்கலாம் என்றும் கேட்டார்.

அதற்கு அம்மா, ''மகனே! ஏன் இதற்கெல்லாம் ஆசைப்படுகிறாய்? விரைவில் இந்த ஆசிரமத்துக்கு நிறைய புத்தகங்கள் வந்து சேரும். அவற்றைப் படித்து நீ உனது ஆன்மிக அறிவை பெருக்கிக் கொள்ளலாம்'' என்றார். அந்தப் பிரம்மச்சாரிக்குக் கொஞ்சம் ஏமாற்றம் ஏற்பட்டது.

அடுத்த சில நாட்களில், நீலு என்னும் அம்மாவின் சீடர் ஒருவர், தான் திருவண்ணாமலையில் நிறைய புத்தகங்கள் சேர்த்து வைத்திருப்பதாகவும் அவற்றை, தான் ஆசிரமத்துக்கே அளிக்க விரும்புவதாகவும் அம்மாவிடம் தெரிவித்தார். சொன்னது போலவே, ஆங்கிலத்திலும், இந்தியிலுமாக தான் சேர்த்து வைத்திருந்த சுமார் இரண்டாயிரம் புத்தகங்களை ஆசிரமத்துக்குக் கொண்டு வந்து சேர்த்தார். இன்று ஆசிரமத்தில் உள்ள பெரிய நூலகம் இப்படித்தான் உருவானது.

- மௌலி

**பெ**யர்தான் நிலா. ஆனால் பேச ஆரம்பித்தால் சூரியன் போலத் தகிக்கிறார். 'ஜாம்பவான்' படத்தில் தமக்கு ஏற்பட்ட அசௌகரியங்களுக்காகப் படப்பிடிப்புத் தளத்தைவிட்டு வெளியேறிய நிலா பிறகு தயாரிப்பாளர்களின் மன்னிப்புக்கு மதிப்புக் கொடுத்து மீண்டும் நடிக்க வந்திருக்கிறார். ஆனாலும் தமிழ் சினிமாவில் மீது இன்னமும் கோபத்தில் இருக்கிறார். ஏன்?

"தமிழ்சினிமாவுல பெண்கள் ஆண்களிடமிருந்து மரியாதையைக் கேட்டுத்தான் வாங்கவேண்டியிருக்கு. ஜாம்பவான் தயாரிப்பாளர்கள் தவறு செய்ததாலதான் தைரியமா படப்பிடிப்பைவிட்டு வெளியேறினேன். 'இதெல்லாம் உன் சினிமா கேரியரையே அழிச்சிடும். திரும்பவும் நடிக்க வந்துடு'ன்னுதான் எல்லோரும் கட்டளையிட்டாங்களே தவிர யாரும் எனக்கு ஆதரவா பேசலை. பேசாம தமிழ் சினிமாவுக்கு முழுக்குப் போட்டுடலாமானுகூட நினைச்சேன். தமிழ் நாட்டுல கருத்துச் சுதந்திரம் கிடையாது. தம் மக்கள் சொந்தக் கருத்துகளைத் தெரிவிக்க அரசாங்கமே விரும்புறதில்லையே. இதுக்கு குஷ்புப் பிரச்னையே ஓர் உதாரணம்.

பிரசாந்த் அப்பா தியாகராஜனுக்காகத்தான் திரும்பவும் நடிக்க வந்தேன். இனிமேல் 'ஜாம்பவான்' யூனிட்டோட நடிக்கிறது கனவிலும் நடக்காது.

**நா**ன் மல்ட்டி மில்லியனர் குடும்பத்திலிருந்து வந்தவள். நல்ல படங்கள்ல நடிக்கறதுக்காக மட்டுமே சினிமாவுக்குள்ளே நுழைஞ்சிருக்கேன். அமெரிக்காவுல தனியா நாலு வருஷம் இருந்தவள் நான். என்னால எந்தச் சூழலையும் தனியா சமாளிக்க முடியும்" என்று ஒரேயடியாகப் படபடப்பானவரிடம் எஸ்.ஜே. சூர்யா பற்றிப் பேசினால் நிறைய 'உச்' கொட்டுகிறார்.

"நிச்சயம் அவர் என்னை கண்ட்ரோல் செய்யறது கிடையாது. நானும் அவரும் பேசி மாசக்கணக்கில் இருக்கும் தெரியுமா? எஸ்.ஜே.சூர்யாவோட பிரச்னையே நிஜத்துல நடிக்க மாட்டார். பாவம்ங்க அவர். அவரோட 'நியூ' படத்தைக் கோர்ட் தடை பண்ணினது எல்லாம் பைத்தியக்காரத்தனம். அதுல என்ன ஆபாசம் இருக்கு? ஹிந்திப் படங்களைப் போய்ப் பாருங்க. அப்புறம் 'பெஸ்ட் பிரண்ட்'ங்கிற டைட்டிலை தமிழ்ப்படுத்தியதும் எனக்குச் சிரிப்பா இருக்கு. ஆங்கிலம் நம்ம நாட்டோட நிர்வாக மொழியில்லையா. இப்படியெல்லாம் செஞ்சு ஆங்கிலத்தை ஒரேயடியா நாட்டைவிட்டு விரட்டிடப் போறீங்களா என்ன?"

வழங்கப்படும் சம்பளத்தில் உடன்பாடு உண்டா என்றால், "தமிழ்சினிமாவுல ஒரு படம் ஹிட்டானால் உடனே சம்பளம் எகிறிடும். ஹிந்தியில நாலைஞ்சு படம் ஹிட்டாகணும். ஆனா அங்கே நடிகர்களுக்கும் நடிகைகளுக்கும் சம்பளம் சரிவிகிதம்தான். ஐஸ்வர்யா ராய் ஒரு படத்துக்கு நான்கு கோடி வாங்குறாங்க. இங்கே டாப்ல இருக்கிற த்ரிஷாவுக்கு அவ்வளவு கிடைக்குமா?" என்று கேள்வி எழுப்புகிறார்.

'ஜாம்பவான்' பட சம்பவத்துக்குப் பிறகு என்னைக் கண்டாலே தமிழ்சினிமாவுல அலர்றாங்க. என்னைச் சுத்தமா ஒதுக்கறாங்க. ஆனாலும் தெலுங்குல எனக்கு வாய்ப்புகள் வரிசையா வருது. தமிழ்ல எனக்கு வைச்ச நிலாங்கிற பேரையே மாத்தி மீரா சோப்ராங்கிற பேர்ல இப்போ நடிக்கத் தொடங்கியிருக்கேன்" எனும்போது நிலாவுக் குத் தேய்பிறைபோல முகம் சுருங்கிப் போகிறது.

- ச.ந.கண்ணன்

# மிரட்டுகிறார்கள்!

அருள்வாக்கு

அஹங்கார நாசத்துக்கு ரொம்பவும் உதவியாயிருப்பது குருகுலவாஸம்தான். "எங்கேயோ இருக்கிற ஈச்வரனிடம் பக்தி பண்ணி, எப்போதோ எழுதிவைத்த சாஸ்த்ர ஒழுக்கத்துக்குக் கட்டுப்பட்டு விநயமாகப் போ" என்றால் இவை



# குருவின் மகிமை!

உள்ளூர ஏறாமல் மேல்மட்டத்தோடு நிற்பதாகவும், எனவே 'தான்' போகாததாகவுமே இருக்கும். அதனால்தான் ப்ரத்யக்ஷமாக ஒரு பெரியவனை குரு என்று காட்டி, அவன் கிட்டே வஸிக்கும்படியாகக் கொண்டு விட்டு விநயத்தை வளர்க்க வேண்டுமென்பது. கண்ணுக்கு முன்னால் அந்த குரு செய்கிற சுத்தமான ஈச்வர பக்தியும், அவர் அநுஸரிக்கிற தர்ம கர்ம அநுஷ்டானங்களும் தன்னால் சிஷ்யனுக்குள் புகுந்து விடும்.

இத்தனை பயனுள்ளதான குருகுலவாஸத்தை 'இந்த நாளில் ஸாத்யமில்லை' என்று சடக்கென்று சொல்லித் தூக்கி எறிந்துவிடக் கூடாது. ஏன் ஸாத்யமில்லாமல்? போன தலைமுறை, ஏன் இந்தத் தலைமுறையின் ஆரம்பம் வரையும் கூட சில சாஸ்த்ரங்களும் கலைகளும் குருகுல வாஸத்தாலேயே வளர்ந்து வந்திருக்கின்றன. அந்த வித்யைகளின் அப்யாஸம் நடக்கவேண்டிய அளவுக்கு ரொம்பக் குறைச்சலாகவே நடந்தாலும், எந்த அளவுக்கு நடந்திருக்கிறதோ அது குருகுலக் கல்வியாகத்தான் இருந்திருக்கிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

# கலாமுடன் கைகோக்கும் குன்னக்குடி!

குடியரசுத் தலைவர் டாக்டர் அப்துல் கலாமின் பதினொரு தமிழ்ப் பாடல்களுக்கு, குன்னக்குடி வைத்தியநாதன் மெட்டமைத்திருக்கிறார். இதை நித்யஸ்ரீ மகாதேவன், சுதா ரகுநாதன் போன்ற பிரபல இசைக் கலைஞர்கள் பாட, ஸி.டி. ஒலிப்பதிவாகி குடியரசுத் தலைவரிடம் அளிக்கப்பட்டது. அதைக் கேட்டு மிகவும் மகிழ்ந்து போனாராம் கலாம். விரைவில் அந்த ஸி.டி. விற்பனைக்கு வரப் போகிறது.

★ தில்லி விக்ஞான் பவனில், டிபார்ட்மெண்ட் ஆஃப் ஓஷன் ஸ்டடீஸ் (கடல்வள ஆராய்ச்சித் துறை), குன்னக்குடி வைத்தியநாதனை ஓர் இசை நிகழ்ச்சி வழங்கக் கேட்டுக் கொண்டிருக்கிறது. நிகழ்ச்சிக்குத் தலைப்பு 'வேவ்ஸ்' (அலைகள்). பிரதமர் மன்மோகன்சிங் இசை நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்குவாராம்.

★ ஓஎஸ்.அருண் சென்னை வந்த பிறகு நடனக் கலைஞர்களுக்குப் பாடுவதை நிறுத்திவிட்டார். ஆனால் தில்லியிலிருந்து நடனக் கலைஞர் கனகா வந்திருந்தபோது, 18 ஆண்டுகளுக்குப் பிறகு அவர் நிகழ்ச்சிக்குப் பாடினார். பாடல்களைப் பேராசிரியர் பப்பு வேணுகோபால் ராவ் மேடையிலேயே உருவாக்கி அளிக்க, அவற்றை அங்கேயே எழுதிக் கொண்டு, அப்போதே மெட்டமைத்துப் பாடினார் அருண். கனகாவும் அந்த நிமிடமே அந்தப் பாடல்களுக்கு நடனம் ஆடினார்.

\- சாருகேசி



* ஓ.எஸ்.அருண்

ராகதேவதை சீரீஸ் (Series) என்ற தலைப்பில் ராஜலட்சுமி ஆடியோஸ் 'சீரியஸா'க (Serious) சங்கரி கிருஷ்ணனை யதுகுல காம்போதி பாட வைத்தனர். ஒன்றரை மணி நேரத்துக்கு அலசி, ஆராய்ந்து அதிலுள்ள பாடல்களை எல்லாம் திரட்டிப் பாட வைத்து இரட்டைக் குறுந்தகடாக வெளியிட்டுள்ளனர்.

சங்கரி கிருஷ்ணன் லால்குடி மாணவி. அதனால் சம்பிரதாயத்திலிருந்து வழுவாமல் மிகுந்த சிரத்தையுடன் பதினான்கு பாடல்களை நீட்டி, முழக்கி, குறுக்கி, விரைந்து பாடியுள்ளார். திருப்புகழ், தில்லானா, தெம்மாங்கு கூட இடம் பெற்றுள்ளன.

\- ஜோதிஸ்வரூபிணி

மைசூரிலுள்ள பிரமரா அறக்கட்டளை கர்நாடக மாநில இசைப் போட்டி (கர்நாடக இசைதான்) நடத்தி விருதும் பரிசும் வழங்கியது. லால்குடி ஜெயராமன் வழங்க, பரிசு பெற்றோர் பெங்களூரைச் சேர்ந்த மாருதி பிரசாத், உடுப்பியைச் சேர்ந்த ரஞ்சனி ஹெப்பார். (இவர்களுள் ரஞ்சனி ஹெப்பார் தமிழகத்து எஸ்.சௌம்யாவிடம் பயின்றவர்!) தலைமை தாங்கிய கர்நாடக ஆளுநர் இருவருடைய கச்சேரிகளையும் கேட்டுப் பிரமித்து, கூடுதலாக தலா 2500 ரூபாய் தந்துவிட்டுப் போனாராம்! எம்.எஸ்.சுப்புலட்சுமி நினைவாக இவ்விருதை நிறுவியிருக்கிறார்கள், அறங்காவலர்கள்.

\- ரஸிகா



* ரஞ்சனி ஹெப்பார்



* குன்னக்குடி



# புஷ்பப் பல்லக்கு!

புஷ்பப் பல்லக்கு வீராசாமி நாயுடு ஒரு பெரிய ஒப்பாரி வைத்தான். "காலங் கெட்டுப் போச்சுங்க. இந்தப் பாழும் மோட்டார் வண்டி வந்தாலும் வந்தது; எங்கள் பிழைப்பில் மண் விழுந்துவிட்டது" என்றான்.

சமீபத்தில் கிராமத்துக்குப் போயிருந்தேன். வாய்க்கால்களில் புது ஜலம் ஆனந்தமாக ஓடிக் கொண்டிருந்தது. விதை தெளிக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. எங்கே பார்த்தாலும் பிரகிருதி தேவி நித்யோத்ஸவம் கொண்டாடிக் கொண்டிருக்கிறாள். ஆனால் வாழ்க்கை மட்டும் ஒரே மயான காண்டமாயிருக்கிறது. 'சோக ரஸத்தைத் தேடி இந்நாளில் நாடகங்களுக்குப் போவது எவ்வளவு அறிவீனம்; அசல் சரக்கு கிராமங்களில் எவ்வளவு வேண்டுமானாலும் இலவசமாய்க் கிடைக்கிறதே' என்று எண்ணினேன்.



# அமரர் கல்கியின் நகைச்சுவைக் கதைகள்



அக்காலத்தில் - இருபது வருஷங்களுக்கு முன்னால் - வீராசாமி நாயுடு நல்ல நிலைமையில் இருந்தான். கோயில் திருவிழாக்களிலும், கல்யாண ஊர்வலங்களிலும், அப்போதெல்லாம் புஷ்பப் பல்லக்குக்கு அதிக கிராக்கியிருந்தது. தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய, சுமார் முப்பது ஊர்வலங்களுக்காவது புஷ்பப் பல்லக்குக் கட்டுவான். ரூபாய் முந்நூறுக்குக் குறையாமல் சம்பாதித்து விடுவான்.

அந்த நாள் போய்விட்டது. இப்போது இரண்டு வருஷமாக ஒரு கிராக்கி கூட அவனுக்குக் கிடைக்கவில்லை.

"போன வருஷத்தில் ஒரு கிராக்கி வந்தது. அச்சாரங்கூட வாங்கிவிட்டேன். ஆனால் கைக்கெட்டியது வாய்க் கெட்டாமல் போய்விட்டது" என்றான்.

"ஓகோ! அதென்ன விஷயம்?" என்று கேட்டேன்.

நாயுடு விவரமாகச் சொன்னான். அவன் சொன்னதிலிருந்தும் இன்னும்

கிராம முனிசிப் கிண்டாமணி முதலியாரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டதிலிருந்தும் வெளியான விவரங்களைக் கீழே தருகிறேன். அவ்விவரங்களில் சிலவற்றை நேயர்கள் அநுசிதம் என்று கருதக்கூடும். ஆகவே கொஞ்ச நேரத்துக்கு நேயர்கள் எல்லாரும் அன்னப் பக்ஷிகளாக மாறக் கடவீர்களாக. நீரையும் பாலையும் கலந்து வைத்தால் எப்படி அன்னப் பக்ஷியானது நீரை நீக்கிப் பாலை மட்டும் அருந்துமோ, அதுபோல நீங்களும் உசிதமான பகுதிகளை விட்டுவிட்டு, அநுசித விஷயங்களை மட்டும் நினைவில் வைத்துக் கொள்வீர்களாக.

**கோ**விந்தகுடி கிராமத்து 'முஸாபரி' பங்களா எழவு பட்ட பாடுபட்டது. கர்ணங்களும், கிராம முனிசிப்புகளும், வெட்டி தலையாரிகளும் தரையில் கால் பாவாமல் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். வாசலில் பந்தல் போட்டுத் தோரணங்கட்டிக் கொண்டிருந்தனர் சிலர். உள்ளே துடைப்பம் தேயும்படி தரையைப் பெருக்கிக் கொண்டிருந்தனர் சிலர். உக்கிராண அறையில் ஒருவர் கறிகாய், உப்பு, புளி சாமான்களையெல்லாம் எடுத்து ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தார். அவர் தான் கிராம முனிசிப் கிண்டாமணி முதலியார். பால்ய வயது. கறிகாய்களில் இருந்த ஒரு சின்ன முட்டைக்கோஸானது அவருடைய இருதயத்தைக் கொள்ளை கொண்டிருந்ததாகத் தெரியவந்தது. அதை அவர் அப்படியும் இப்படியும் திருப்பித் திருப்பிப் பார்த்தார். முகர்ந்து பார்த்தார். வாயைச் சப்புக் கொட்டினார். அப்புறம் பெருமூச்சுவிட்டார்.

"இனியே தெமக்குன் அருள்வருமோவெனக் கருதி
ஏங்குதே நெஞ்சமையோ!"

என்று வாய்க்குள்ளே பாடத் தொடங்கினார். இதற்குள் கணக்கப் பிள்ளை காளமேக ராவ் கையில் செம்புடன் அங்கு வந்து சேர்ந்தார்.

"ஓ மணியக்காரரே! நானும் நீரும் இந்த உத்தியோகம் பார்க்கிறதைவிட க்ஷவரம் பண்ணலாம்!" என்றார்.

"க்ஷவரம் பண்ணுகிறதென்றால் இலேசு என்று நினைக்கிறீர் போலிருக்கிறது. ராயரே! சென்னைப் பட்டணத்தில் ஒரு ஸலூன் இருக்கிறதாம். அதிலே ஒரு க்ஷவரத்துக்கு மூன்று ரூபாயாம்!" என்றார் முனிசிப். பிறகு, "சரிதான், போன காரியம் என்ன?" என்று கேட்டார். "ஊரெல்லாம் சுற்றி ஒன்றரைச் சேர் பால்தான் அகப்பட்டது." என்றார் கர்ணம்.

இவ்வளவு தடபுடல்களுக்கும் காரணம் என்னவென்று கேட்டால், தாசில்தார் பிரம்மஸ்ரீ லஞ்சநாத சாஸ்திரி அன்று தமது தர்மபத்தினி சமேதராக அங்கு எழுந்தருள்வாரென்று செய்தி வந்திருந்ததுதான்.

**வ**ழக்கத்தைவிட அதிக ஜரூராக இந்தத் தடவை தாசில்தார் விஜயத்துக்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஏனென்றால், சென்ற வருஷத்து ஜமாபந்தியின்போது நேர்ந்த ஒரு முக்கிய சம்பவம் கிராம உத்தியோகஸ்தர்களின் மனத்தையெல்லாம் கலக்கியிருந்ததுதான். அப்போ இருந்த தாசில்தார் திருவாளர் பெத்த பேராசைப் பிள்ளை என்பவர் தம் கையினால் சில்லறை வாங்குவதில்லையென்ற தீவிர விரதம் கொண்டவர்; வாங்கினால் நோட்டுக்களாகத்தான் வாங்குவார். ஜமாபந்தியின்போது அவர் கிராம உத்தியோகஸ்தர்களை பட்ச பாதமில்லாமல் நடத்தினார். தலைக்குப் பத்து ரூபாய் தட்சிணை வைக்க வேண்டுமென்றார். ஒரு கணக்கப் பிள்ளைக்குப் போதாத காலம் இருந்தது. பத்திரிகைகள் படித்து வந்ததன் பலன் அது. தாசில்தாருடைய குணாதிசயங்களை ஓர் அழகான ஹாஸ்யக் கட்டுரை போல எழுதினார். இவ்வளவு ரசமான கட்டுரை எழுதி விட்டுத் தம்முடைய பெயரை மறைக்கவோ, புனை பெயர் வைத்துக் கொள்ளவோ அவருக்கு விருப்பமில்லை. கையெழுத்துப் போட்டார்.

"என்ன தொழில் பண்றீங்க?"
"சாமி சிலைகள் செஞ்சு விக்கறேன்."
"ஓ...! 'செய்யும் தொழிலே தெய்வம்'னு சொல்லுங்க!"
- குட்டி பிரசன்னா

அந்த வருஷம் பெரிய கலெக்டர் ஜமாபந்தி. பெரிய கலெக்டர் பல்டன் துரை 'நெறி தவறாத நேர்மையாளர்' 'இந்திய ஜனங்களிடம் மிக்க அபிமானமுள்ளவர்' என்றெல்லாம் பெயர் பெற்றவர். இதை நம்பி மேற்படி கர்ணம் தாம் எழுதிய ஹாஸ்யக் கட்டுரையை ஜமாபந்தியின் போது கலெக்டர் முன்பு சமர்ப்பித்தார். அவ்வளவுதான். கொஞ்ச நாளைக்கு அந்தத் தாலுக்கா எமலோகம் படும்பாடு பட்டது. விசாரணையில் கணக்கப் பிள்ளையின் புகாரை ஆதரித்துச் சாட்சி சொல்ல ஒரு கிராம உத்தியோகஸ்தர் கூட முன் வரவில்லை. கர்ணத்துக்குக் கர்ணம் வேலை போயிற்று. ஸ்ரீமான் பெத்த பேராசைப் பிள்ளைக்கும் தாசில் உத்தியோகம் போயிற்று. (ஆனால் 'ஆக்டிங் டிபுடி கலெக்டர்' உத்தியோகம் கிடைத்தது).

மேற்படி சம்பவம் சமீபத்திலேதான்



நடந்திருந்ததாகையால் திருவாளர் பெத்த பேராசைப் பிள்ளையின் ஸ்தானத்துக்கு இப்போது வந்திருந்த பிரம்ம ஸ்ரீ லஞ்சநாத சாஸ்திரியை வரவேற்பதில் கிராம உத்தியோகஸ்தர்கள் தீவிர கவனம் செலுத்தி வந்தார்கள்.

சற்று நேரத்துக்கெல்லாம் ரிவினியூ இன்ஸ்பெக்டர் தீராத்துயரமய்யங்காரும், தாசில்தாரின் காம்ப் கிளார்க் விகாரம் பிள்ளையும் வந்து சேர்ந்தனர். சுற்றுப் பக்கத்திலிருந்து எல்லாக் கர்ணம் கிராம முனிசிப்புகளும் வந்திருக்கிறார்களா என்று அவர்கள் சோதனை செய்தபின், உக்கிராண அறைக்குச் சென்று போஜன பதார்த்தங்களைப் பார்வையிட்டனர். ஒரு பெரிய செம்பின் அடிவாரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த பாலைக் கண்டதும் விகாரம் பிள்ளைக்குப் பெருங்கோபம் வந்தது. அவர் கிராம முனிசிப்பை ஓட விடவே, அவர் வெட்டி தலையாரிகளை ஓட விட்டார். விகாரம் பிள்ளை அப்பால் போனதும், ரிவினியூ இன்ஸ்பெக்டர் கிராம முனிசிப்பின் காதோடு, "ஓய்! சுத்த மோசமாயிருக்கிறீரே! பாலைத் தீர்த்த மாட்டி வைக்கிறதானேங்காணும்! வருகிறவர் சாஸ்திரிகளாச்சே!" என்றார்.

சுபதின, சுபயோக, சுப முகூர்த்தத்தில் தாசில்தார் லஞ்சநாத சாஸ்திரியும், அவருடைய தர்மபத்தினி ஸ்ரீமதி கற்பகாம்பாளம்மாளும், மைத்துனி சௌபாக்கியவதி செல்லக்கிளியும், குழந்தைகள் அரைடஜனும் மேற்கத்திமாடு கட்டிய இரண்டு வில் வண்டிகளில் ஜாம் ஜாமென்று வந்து இறங்கினார்கள். வந்த களைப்பு நீங்கியதும், அம்மாள் உக்கிராண அறையைப் பார்வையிடச் சென்றாள்; கணக்கப் பிள்ளை ராயர் பயபக்தியுடன் முன் வந்து "டிபன் என்ன போடச் சொல்கிறது?" என்று கேட்டார்.

"நீர் யார்?"

"நான்தான் உள்ளூர் கர்ணம்?"

"பரிசாரகன் எங்கே?"

அம்மாளைக் கண்டதும் கதவிடுக்கில் ஒளிந்து கொண்ட பரிசாரக முத்துவையர் இப்போது வெளியே வந்தார். "இதோ இருக்கேன்" என்றார்.

"நீதானா? உன் துணியைப் பார்த்தாலே சாப்பாடு வேண்டியிராது போலிருக்கே! இருக்கட்டும். சேமியா கேஸரி போடத் தெரியுமா?"

"தெரியும்" என்றார் முத்துவையர். ஆனால் ராயருக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஏனென்றால், சேகரித்திருந்த சாமான்களில் சேமியா இல்லை. 'இந்த அம்மாள் வெகு கெட்டிக்காரி; எது இல்லையோ அதைப் பார்த்துக் கேட்கிறாள், பார்த்தாயா?' என்று நினைத்துக் கொண்டு, "இதோ வாங்கி வரச் சொல்கிறேன்" என்றார்.

"ரொம்ப பேஷ்! சேமியா கூட வாங்கவில்லையா?" என்று அம்மாள் உதட்டை ஒரு மடிப்பு மடித்தாள். ராயர் "இதோ வந்து விட்டது" என்று ஓட்டம் பிடித்தார்.

(தொடரும்)

## "இன்டர்நெட்தான் இன்று 'சிவாஜி'யின் மிகப்பெரிய எதிரி!"

ஏவி.எம்.சரவணன், அண்மையில் மதுரையிலிருந்து சென்னைக்கு விமானத்தில் வந்து கொண்டிருந்தபோது, சக பயணியான ஒரு தொழிலதிபர், "சிவாஜி படத்தை ரெண்டு மணி நேரத்துல, நூறு கோடி ரூபாய்க்கு வித்திட்டீங்கன்னு பேப்பர்ல படிச்சேன், கங்கிராட்ஸ்!" என்று பாராட்டினார். உடனே சரவணன், "அது தவறான நியூஸ்! நான் படத்தோட பிஸினஸ் பத்தி இன்னும் பேசவே ஆரம்பிக்கலை!" என்று பதில் சொன்னார்.

அடுத்த சில தினங்களில், 'சிவாஜி' படத்தின் விநியோகம், ஆடியோ, வீடியோ, சாட்டிலைட் என்று சகல உரிமைகளையும் சன் டி.வி வாங்கிவிட்டது. இதற்காகக் கைமாறவிருக்கும் தொகை தொண்ணூறு கோடி என்று ஒரு தகவல் வெளியானது. உடனே ஏவி.எம். தரப்பிலிருந்து, "இது ஆதாரமில்லாத வதந்தி!" என்று மறுப்பு அறிக்கை வெளியானது.

# சிவாஜியின்



உண்மை நிலவரம் என்ன? பலரும் சிவாஜி படத்தை எப்படியாவது வாங்கி விட வேண்டும் என்று தலைகீழாக நின்று முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். ஏவி.எம். படங்களை வழக்கமாக வாங்கி, விநியோகிக்கும் விநியோகஸ்தர்கள் தவிர, வேறு பல விநியோகஸ்தர்களும் படத்தை வாங்குவதற்கு முயன்று கொண்டிருக்கிறார்கள் என்பது ஒரு பக்கம் என்றால், சினிமாவுக்கே கடுகளவும் சம்பந்தமில்லாத மூன்று பேர்கள், "தமிழ்நாடு முழுக்க ஒரு ரேட் பேசி வாங்கிக்கறோம்!" என்று சொல்லிக் கொண்டு அதிரடியாக அணுகியிருக்கிறார்கள். "இவர்கள் எல்லாம் எந்த அடிப்படையில் பிஸினஸ் பேச வருகிறார்கள் என்றே புரியவில்லை" என்று முணுமுணுக்கிறது ஏவி.எம். வட்டாரம்.

படம் குறித்து யாருமே பேசத் தயாராக இல்லை. அதனாலேயே ஆளுக்கு ஆள் கற்பனையில் 'எக்ஸ்க்ளூசிவ்' நியூஸ்

தந்து கொண்டு இருக்கிறார்கள். இன்டர்நெட்தான் இன்று சிவாஜியின் மிகப் பெரிய எதிரி.

டைரக்டர் ஷங்கர் செய்வது போல, இன்டர்நெட்டில் கூட கற்பனையாகக் கதை விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. அவற்றையெல்லாம் ஒரு நடை பார்த்தால், ஷங்கருக்கே புது ஐடியாக்கள் நிறைய கிடைக்கக் கூடும்.

'ரஜினி, அயல்நாட்டில் வாழும் ஓர் இந்தியர் (தமிழர்). அவர் இந்தியா திரும்பும்போது, இங்கே கல்வித் துறையில் நடைபெறும் லஞ்ச ஊழல், ஒழுங்கீனங்கள் குறித்து மிகவும் வேதனைப்படுகிறார். அதன்பின் அவர் என்ன செய்கிறார் என்பதே கதை' என்பது ஒரு நெட் ரசிகர் தரும் தகவல்.

ஏ.ஆர்.ரஹ்மான் மொத்தத்தில் நான்கு பாடல்கள் தரவேண்டும். மூன்று பாடல்கள் கொடுத்து விட்டார். ஷங்கரின் படங்களில் தவறாமல் இடம்பெறும் கிராமிய பாட்டு மட்டும்

• ஏவி. எம். சரவணன்



# சம்பளம் எவ்வளவு?

பாக்கி. அதையும் ரஹ்மானிடமிருந்து வாங்கியபின், ஷூட்டிங் முடிந்ததும், ஆடியோ ரிலீஸ் திட்டமிடப்பட்டுள்ளது.

"என்ன சார்! சிவாஜி படம் குறித்து ஒரு நியூஸ்ூம் வரவில்லையே!" என்று ஏவி.எம். சரவணனிடம் கேட்டால், "நாங்க எடுக்கும் படத்துக்கு ஹீரோ ரஜினி, டைரக்டர் ஷங்கர். இரண்டு பேருமே ரகசியம் காப்பாற்றப்பட வேண்டும் என்று நினைப்பவர்கள். அவர்கள் உணர்வை நான் மதிக்கிறேன்; அவர்கள் அனுமதிக்கும் நேரத்தில் மீடியாவுக்கு எல்லா விவரங்களும் கிடைக்கும்! அதுவரை பொறுத்துக் கொள்ளுங்கள்" என்று தனக்கேயுரிய மென்மையான குரலில் சொல்லிவிட்டார் சரவணன். அதெல்லாம் சரி! சிவாஜி படத்தில் ரஜினிக்கு எவ்வளவு சம்பளம்?

"இன்னும் முடிவு செய்யவில்லை. இதுவரை ரஜினி வாங்கி இருப்பது வெறும் ஆயிரத்தொரு ரூபாய் அட்வான்ஸ் மட்டுமே!"

- எஸ்.சந்திரமௌலி

" 'சிவாஜி'யின் சாட்டிலைட் உரிமையை சன் டீ.வி. வாங்கி விட்டதென்பது ஆதாரமில்லாத வதந்தி!"

இன்றைய விஞ்ஞானம் எத்தனையோ தொழில்களை நவீனமாக்கிவிட்டாலும் அதை இயக்குவதற்கு மனிதனின் அவயங்கள் எந்த விதத்திலாவது தேவைப்படுகிறது. அந்த வகையில் மனிதனின் அவயங்கள்தான் அவனது மூலதனம் என்று சொல்லலாமா?

"சந்தேகமே இல்லாமல் என்னைப் போன்ற பாடகர்களுக்குக் குரல்தான் மூலதனம். அதைப் பாதுகாப்பது மிக முக்கியம். அதுக்காக எத்தனையோ ஆசைகளை விட்டுக் கொடுக்கறோம். சுயகட்டுப்பாடுகளை விதிச்சுக்கறோம். ஒரு நாளைக்கு குரலில் சின்ன மாற்றம் ஏற்பட்டாலும் மூடு அவுட்டாகி எதிலும் கவனம் போகாது" என்று சொல்கிறார் பாடகர் கார்த்திக். அவரே தொடர்ந்து சொன்னது :

"வெறும் உணவுக் கட்டுப்பாட்டால் மட்டும் குரலைப் பாதுகாத்திட முடியாது. எப்பவும் உற்சாகமான மனநிலை, நல்ல உறக்கம்னு எத்தனையோ இருக்கு. சாதாரணமா மற்றவர்களோடு பேசறப்ப கூட குரலை ரொம்ப உயர்த்தாம கவனமா இருப்பேன். தெருவுல காய்கறி விற்கிறவங்க சத்தமா குரல் கொடுக்கறதைக் கேட்கறப்ப மனசு பதறும். ஐயையோ இப்படிக் கத்தறானே. இவன் குரல் என்னத்துக்கு ஆகறதுன்னு நினைச்சுப்பேன்."

"அதெல்லாம் பார்த்தா பிழைப்பு நடக்குமா சார்? நான் முப்பது வருஷமா இதே தொழிலைத்தான் செய்துட்டு இருக்கேன். சில பேர் மணியைக் கட்டி அடிப்பாங்க. அது நமக்குப் பிடிக்காது. தெருவோட இந்த முனையில குரல் கொடுத்தேன்னா அந்த முனையில இருக்கற வீட்டுக்காரம்மா வெளிய வந்து ரெடியா நிப்பாங்க. அந்த அளவுக்கு நம்ம குரல் மத்தவங்களுக்குப் பழகிப் போச்சு. நமக்கும் இப்படிக் கூவிக் கூவி பழகிப் போச்சு. என்னிக்காவது வீட்ல சும்மா இருந்தாத்தான் தலைவலி வந்துடும்" என்கிறார் தெருத் தெருவாகக் காய்களை விற்கும் கணபதி என்பவர்.

இப்படிக் கத்தி கத்தி பழகிட்டதால மத்தவங்ககிட்ட பேசறப்பகூட சத்தமாதான் பேசுவேன். ஏன்ய்யா இப்படிக் கத்தறேன்னு சொல்வாங்க. மத்தபடி குரலை நல்லா வெச்சுக்கறதுக்கு இதைச் சாப்பிடணும் அதைச் சாப்பிடக் கூடாதுன்னு எந்தக் கட்டுப்பாடும் வெச்சுக்கறதில்லே" என்று சொல்லிவிட்டு "தக்காளி... முருங்கைக் கா..." எனத் தொழிலில் கவனமானார்.

* ரெய்சல்விட்டல்





இவர் சொல்வதையே ஓரளவுக்கு ஆமோதிக்கிறார் ரெய்சல் விட்டல். இவர் நாற்பது வருடங்களாக ஆசிரியையாக இருக்கிறார். பணியிலிருந்து ஓய்வளிக்கப்பட்ட பிறகும் மீண்டும் மற்றொரு பள்ளியில் வந்து சேர்ந்துள்ளார். அதற்கு அவர் சொல்லும் காரணம் என்ன தெரியுமா?

"பிள்ளைகளோடு பேசிப் பழகிப் போன என்னை மாதிரி ஆசிரியருக்கு வீட்டுல சும்மா இருக்கறது பிடிக்காது. எதையோ இழந்த மாதிரி இருக்கும். வகுப்புக்குள்ள நுழைஞ்சதுமே 'ஆய் ஊய்'னு நாம கத்தினா பிள்ளைங்களும் பதிலுக்குக் கத்துமே தவிர நம்மைக் கவனிக்காது. அதனால நமக்குத் தொண்டை வலிதான் மிஞ்சுமே தவிர பிள்ளைங்களுக்குப் பயனில்லை. நம்முடைய அணுகுமுறைதான் முக்கியம். ரொம்பவும் கத்தாம, அதே நேரம் பிள்ளைங்களுக்குக் கேட்க சோர்வு ஏற்படாத வகையில் சொல்லித்தரணும். அப்படிச் சொல்லிக் கொடுக்கறப்ப வலி



• கார்த்திக்

# குரலே எங்கள் மூலதனம்!



தெரியறதில்லே. இதுக்காகப் பயிற்சின்னு எதுவும் எடுக்கறதில்லே. உணவுக் கட்டுப்பாடுன்னு எதுவும் விதிச்சுக்கறதில்லே" என்றார்.

'தினமும் காலை முதல் மாலை வரை இப்படிச் சொல்லிக் கொடுப்பதால் எரிச்சலோ, சலிப்போ ஏற்படுவதில்லையா? உடல்ரீதியாக எதாவது பிரச்னை ஏற்படுவதுண்டா?' என்று கேட்டால் மறுக்கிறார்.

"இன்னும் சொல்லப் போனால் நான் ஓய்வுல இருந்தப்ப பி.பி., சுகர்னு வந்துடுச்சி. ஆனா இங்க மறுபடியும் வேலைக்கு வந்த பிறகு அதெல்லாம் எங்கே போச்சுன்னே தெரியலை. ஒரு தொழிலை மனநிறைவோடு செய்யறப்ப வியாதிகளும் ஓடிப் போய்டும். வலிகளும் இருக்காது" என்று கூறிச் சிரிக்கிறார்.

- யுவராஜ்

படங்கள் : ஸ்ரீஹரி





• கணபதி



இது எங்க பக்கம்!

# தியாகம் யார் செய்வார்?

**த**மிழக அரசு, தமிழ்ப் பெயர் வைத்து எடுக்கப்படும் படங்களுக்குக் கேளிக்கை வரி ரத்து செய்யப்படும் என அறிவித்துள்ளது. இதன்மூலம் தமிழை வளர்ப்பது இருக்கட்டும். தென் மாவட்டங்களில் பெரும்பாலான திரையரங்குகளில், டிக்கெட்டில் அச்சிடப்பட்டிருக்கும் தொகையை விட அதிகமாகவே பணம் வசூலிக்கின்றனர். இதன்மூலம் அரசுக்கு ஏற்படும் வரி இழப்பு ஒருபுறம், டிக்கெட்டில் அச்சிடப்பட்டிருப்பதைவிட அதிகவிலை கொடுக்கிறோமே எனும் மக்களின் மனநிலை ஒருபுறம். அரசின் கவனம் இதன்மீதும் திரும்ப வேண்டும்.

**- வி.சித்ரா, விளாம்பட்டி**

**வி**ழுப்புரம் மாவட்டம் கள்ளக்குறிச்சி நகரில் வழக்கறிஞராகப் பணியாற்றிவரும் எனது நண்பரின் பெயர் ஒத்துவாழ். அவரது மூத்த சகோதரரின் பெயர் உலக சேவைபுரி. மூத்த சகோதரியின் பெயர் வாழும் விளக்கு. இளைய சகோதரரின் பெயர் நிதானம். நண்பரது பெற்றோரின் உயர்ந்த எண்ணத்தைப் பாராட்டத் தோன்றுகிறதல்லவா!

**- சு.சுந்தர், நெய்வேலி**



**கா**மராசர் பிறந்த தினத்தையொட்டி காங்கிரஸ் வழக்கறிஞர், இ.குருசாமி சார்பில் ஒட்டப்பட்ட சுவரொட்டி வாசகம் : உமது ஆட்சி நிறுவ எல்லோருக்கும் ஆசை; உமது தியாகம் செய்ய எவருக்கும் இல்லை ஆசை.

**- தேவமைந்தன், மதுரை**

• படம் : ஸ்ரீஹரி

## ராசிபலன்

## தஞ்சை பரத்வாஜ்

**6.8.06 முதல் 12.8.06 வரை**



• படம் : ஸ்ரீஹரி

**மேஷம் :** புத்துணர்ச்சி பான வாரம். புதிய முயற்சிகள் கைகூடும். வீடு / வாகனம் வாங்க நல்ல காலம். கல்வி வளம் மேலோங்கும். வீடு மாற்றம் ஏற்படும். தொழில் துறையில் நற்பெயர் கிட்டும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். உடல்நிலை நன்றாக இருக்கும். கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். வியாபாரத்தில் முன்னேற்றம் கிட்டும். பணக் கஷ்டம் வராது. பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். வேலைப் பளு அதிகரிக்கும். அண்டை நாட்டு வியாபாரம் மேன்மை காணும். சனிக்கிழமை ஆஞ்சநேயரை வணங்கித் தீபம் ஏற்றி வருவதால் நற்பலன் அதிகரிக்கும்.

**ரிஷபம் :** வழக்குகள் வெற்றி அளிக்கும் வாரம். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய நண்பரை விட்டுவிலக நேரிடும். வேலையில் இட மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் மிகுந்து காணும். உடல்நிலை நல்ல நிலையில் இருக்கும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். திருமணத் தடை விலகித் திருமணம் கைகூடும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**மிதுனம் :** வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். பணக்கஷ்டம் இராது. தொழில் ஸ்தானத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். இறுக்கம் நிறைந்து காணப்படும். பொறுமை தேவை. கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். தாயின் உடல் நிலை சுமாராக இருக்கும். வெளிநாடுகளுக்குப் பிரயாணம் செல்ல நேரும். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். அண்டை நாட்டு வியாபாரம் சூடு பிடிக்கும். நண்பர்களால் ஆதாயம் உண்டாகும். ராகு / கேது வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**கடகம் :** மன உளைச்சல் தீரும் வாரம். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். தெய்வ அனுகூலம் ஏற்படும். புதிய முயற்சி அனுகூலம் ஆகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சிலருக்கு இடமாறுதல் உண்டாகும் வேலைப் பளு அதிகரிக்கும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். பணக்கஷ்டம் விலகும். குடும்ப வாழ்வு நற்பலனைத் தரும். சுபகாரிய பேச்சுவார்த்தை வெற்றி அளிக்கும். தொழில்துறையில் நல்ல முன்னேற்றம் கிட்டும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

லெட்சுமி கடாக்ஷம் கிட்டும். திருமணத் தடை விலகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். குரு / சனி வழிபாடு செய்து வருதல் நலம்.

**சிம்மம்** : வீண் விரயங்கள் அதிகரிக்கலாம். கவனம் தேவை. நெருங்கிய நண்பர்களால் ஏமாற்றப்படலாம். வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் சிக்கல் வரும். தொழில் துறையில் வேலைப்பளு அதிகரிக்கும். சுபகாரியம் சற்றுத் தள்ளிப் போகும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போகவும். உடல்நிலையில் கவனம் தேவை. பேச்சுவார்த்தையில் சற்று இழுபறி உண்டாகும். பணப் பற்றாக்குறை இருக்கும். ராகு / கேது / குரு சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கன்னி** : லாபகரமான வாரம். புதிய தொழில்முயற்சி அனுகூலம் தரும். வெளிநாட்டு ஒப்பந்தம் நற்பலனைத் தரும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். பணக்கஷ்டம் இராது. சுபச்செலவு ரெடி. வேலைப்பளு அதிகரிக்கும். வேலையில் நன்மை கிட்டும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். அன்னிய நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வாக்குவன்மை மேலோங்கும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். அனாவசியச் செலவுகள் இருக்காது. திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. புதிய முயற்சி கைகூடும். வெளிதேச வாசத்துக்கு வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சத்ரு தொல்லை ஒழியும். கொடுக்கல் வாங்கலில் நல்ல லாபம் காணும். ராகு / கேது வழிபாடு செய்து வருவது நலம்.

**துலாம்** : பண வசதி மிகுதி ஆகும். வழக்கு வெற்றி வாகை சூடும். எதிரிகள் சரண் அடைவார்கள். கொடுக்கல், வாங்கல் நற்பலனைத் தரும். உடல் நிலை சுமாராக இருக்கும். வியாபாரத்தில் நல்ல லாபம் காணும். புண்ணிய மஹான் சந்திப்பு உண்டாகும். சுபச் செலவு ரெடி. நண்பர் / உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். மனை / வீடு வாங்க நல்ல தருணம். மன உளைச்சல் தீரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். புதிய தொழில் முயற்சி அனுகூலம் ஆகும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்** : செல்வாக்கு மிகுந்த வாரம். பணக்கஷ்டம் இராது. வாக்கு, தனம், குடும்பம் மேலோங்கும். வீடு / மனை வாங்க நல்ல காலம். சுபகாரியச் செலவுகள் வந்துசேரும். எதிர்பாராத பிரயாணம் செய்ய நேரும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும் புதிய முயற்சி நற்பலனைத் தரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும் பத்திரிகைகளில் பெயர் வரும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு

**தனியார் கல்லூரியில் பணியாற்றும் எனது மகனுக்கு அரசுப் பணி கிடைக்குமா? வெளிநாட்டில் சம்பாதிக்கும் யோகம் உள்ளதா? திருமணம் எப்போது நடக்கும்?**

**- ச.மாரிமுத்து, கோவிந்தபுரம்**

உங்கள் பையனுக்குச் சூரியதசை நடந்து வருகிறது. அரசுப் பணி கிடைக்காது. வெளிநாட்டு வேலை நற்பலனை அளிக்கும். முயற்சி செய்தால் உடனே கிடைக்கும். 30.09.2007-க்குப் பிறகு திருமணம் நடக்கும். ஓர் உடன்பிறப்புடன் பிறந்த, படித்த, பண்புள்ள, வேலையில் உள்ள பெண் அமையும். தோஷம் எதுவும் இல்லை.

**என் கணவருக்கு வேலை, சம்பளம் திருப்தியாக இல்லை. வேறு**

**பரத்வா**

கேது / குரு வழிபாடு செய்து வருவது நலம்.

**தனுசு** : விபரீத ராஜயோகமான வாரம். எதிர்பாராத பிரயாணம், எதிர்பாராத பணம் கிட்டும். உடல்நிலையில் கவனம் தேவை. வண்டி, வாகனத்தில் செல்லும்போது கவனம் செலுத்தவும். சுபகாரியம் கைகூடும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். கணவன் - மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப்போவது நற்பலனைத் தரும். நண்பர், உறவினர்களால் நன்மை ஏற்படும். சிலருக்கு வெளியூர்ப் பிரயாணம் செய்ய நேரிடும். உடல்நிலை சுமாராக இருக்கும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். குடும்ப வாழ்வில் நற்பலனை அளிக்கும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்** : தெய்வ அனுகூலத்தில் முன்னேற்றம் கிட்டும். மன இறுக்கம் மிகுதியாக இருக்கும். உடல்நிலையில் கவனம் தேவை. அனாவசியமான செலவுகள் ஏற்படும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். வேலையில் தொல்லைகள் இருக்கும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. கணவன் - மனைவிக்குள் விட்டுக் கொடுத்து அனுசரணையாக நடந்து கொள்வது நற்பலனைத் தரும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். தாயின் உடல்நிலை சுமாராக இருக்கும். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை உண்டாகும். சுபகாரியம் கைகூடும். நண்பர் / உறவினர்களால் நன்மை ஏற்படும். சனி / குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கும்பம்** : எதிர்ப்புகள் நிறைந்த வாரம். உடல்நிலையில் கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். உத்தியோகத்தில் வேலை மாற்றம் வரும். வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும். குடும்பத்தில் விட்டுக் கொடுத்து அனுசரணையாக நடந்து கொள்வது நற்பலனைத் தரும். உடல்நிலையில் கவனம் தேவை. உணவுக் கட்டுப்பாடு அவசியம். வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். நீண்ட தூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வீடு / மனை வாங்க நல்ல காலம். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம்** : மன உளைச்சல் தீரும் வாரம். அன்னிய நாட்டு மனிதர்களால் நற்பலன் உண்டாகும். எதிர்பாராத பிரயாணம் வந்து சேரும். புதிய முயற்சி பலன் அளிக்கும். கணவன் - மனைவிக்குள் விட்டுக் கொடுத்தல் நற்பலனை அளிக்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். தூர தேச அழைப்பு கிட்டும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். வேலையில் நல்ல பெயர் ஏற்படும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் அபிவிருத்தி செய்ய நேரிடும். பூமி / வீடு வாங்க நல்ல காலம். பண வரவு அதிகரிக்கும். குழந்தைகளால் திருமண காரியம் கைகூடும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். அண்டை நாடு வர்த்தகம் நல்ல பலனைத் தரும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும். ●

## பதில்கள்...

**வேலை கிடைக்குமா?**

**- அனுராதா கணேஷ், சாலிகிராமம்**

உங்கள் கணவருக்கு தற்பொழுது 33 வயது நடக்கிறது. புதன் தசை கேது புத்தி முடிவடைந்து, புதன் தசை சுக்ரபுத்தியில் நல்ல வேலை கிடைக்கும். வெளிநாட்டுப் பணி நற்பலன் தரும். முயற்சி செய்யவும். மேல் நாட்டில் வசிக்கும் வாய்ப்பு உள்ளது.

**திருமணத்தைத் தள்ளிப் போடும் என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்? எதிர்காலம் பற்றிக் கூறவும்.**

**- ஜெயலட்சுமி, வேளச்சேரி**

தங்கள் மகளுக்கு 25 வயதில் திருமணம் நடக்கும். வெளிநாட்டில் வேலை செய்யும் பையன் அமைவான். உடன்பிறப்பு ஒருவர் இருப்பார். பெற்றோர் பார்த்து ஏற்பாடு செய்யும் திருமணம்தான்!

ஜெரா

அவள் திடுக்கிட்டு விழித்துக் கொண்டபோது, மாதா கோயிலின் மணிச்சத்தம் கேட்டது. உள்ளுக்குள் பரபரவென்று ஏதோ ஒன்று பற்றிக் கொண்டது!

தூக்கமிழந்த கண்கள் நெருப்பாய்க் கனன்று கொண்டிருந்தன! நாலங்குல கனத்தில் கோணிச் சாக்கு மெத்தை, தரையின் ஜில்லிப்பைத் தடுத்து நிறுத்த முடியாது நைந்து போய்த் தன்னை நனைத்துக் கொண்டிருந்தது.

குடிசையின் கதவைத் திறந்ததும், பனிப்புகையும் பருவக் காற்றும் அழையா விருந்தாளிகளாகின.

அவளுக்கு எதைப்பற்றிய உணர்வும் இல்லை! எதிர்பார்ப்பும், உள்ளுக்குள் மெல்லிய கோடாய் நெளியும் ஆனந்தமும் அவளை அரக்கப் பரக்க அலைக்கழித்தன!

ஈரத்துணியால் முகம் ஒத்திக் கொண்டாள்! மேலோட்டமாக முடி ஒதுக்கி, நுனியில் முடிச்சுப் போட்டாள்! ஒட்டும் பொட்டை நெற்றி மேட்டில் இட்டுக் கொண்டாள்!

கால்களைப் பரப்பித் தூங்கிக் கொண்டிருந்த நான்கு வயது மகனை, நகர்த்தித் தள்ளி எழுப்பி விட்டு, சிணுங்கலுக்கு நடுவே அவனைச் சின்னக் கால்சட்டைக்குள் சிறைப்படுத்தினாள்! தூளியில் துணிச் சுருளுக்குள் துவண்டிருந்த இரண்டு வயது மகளைத் தன் இடுப்பில் ஏந்திக் கொண்டு, குடிசைக் கதவை இழுத்துச் சாத்தி கொக்கி மாட்டிக் கட்டினாள்!



மறக்காமல், காசு வைத்திருந்த சுருக்குப் பையை இடுப்பில் செருகிக்கொண்டு, துணிப்பைச் சுருளைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு, பையனின் கையைப் பிடித்தபடி கவனமாக மேட்டிலிருந்து இறங்க ஆரம்பித்தாள்!

அவளுக்குப் புருஷனைப் பற்றிய உணர்வே இல்லை. கவனம் முழுவதும் ரேஷன் கடையிலேயே இருந்தது. கனவில்கூட அரிசி மழையும், கோதுமைச் சாரலும், மைதாக்காற்றும், மண்ணெண்ணெய் ஊற்றும், சர்க்கரைப் பந்தலும், சர்வ அலங்காரத்துடன் காலூன்றி நின்று

அமரர் கல்கி
நினைவுச் சிறுகதைப்
போட்டியில்
இரண்டாம் பரிசு
ரூ.7,500
பெறும் கதை

# அட்டை



அவனுக்குக் கட்டியம் கூறின!

இந்த மலைக் கிராமத்துக்கு வாழ்க்கைப்பட்டு வந்த பிறகு, கொஞ்சங் கொஞ்சமாய் வாழ்வின் அவலங்களை அடையாளம் கண்டு வறுமையின் கோரப் பிடியில் தினம் தினம் நொந்தபோது, வெளிச்சமாய் அவளுடைய கண்ணுக்குள் புலப்பட்டது ரேஷன் கடை மட்டும்தான்!

மலை ஏற வேண்டிய காரணம் காட்டி உச்சியில் உலாவும் உணவுப் பொருள்களின் விலை, ஓடாகத் தேய்ந்து உழைத்தாலும் இடுப்புக் கச்சைக்குள் அடங்கி ஒடுங்கி விடும் தினக் கூலி, வெளி உலகத்தோடு ஒட்டாமல் ஒதுங்கி வாழும் மலைக் கிராம வாழ்க்கை, இவை விதைத்த விரக்திக்கு நடுவே, மாதம் தவறாமல் பொருள் வழங்கும் ரேஷன் கடை அவள் மனத்தில் மத்தாப்புக் கொளுத்தியது! அரை வயிற்றை நிரப்பிக் கொள்ளவாவது ஓர் ஆதாரம் இருக்கிறதே என்ற ஆனந்தத்தில் அவள் குடிசையை அக்கு அக்காக அலசியதுதான் மிச்சம்! குடும்ப அட்டை கண்ணில் படவில்லை!

புருஷனை விசாரித்தாள். அவனுக்குப் புரியாவிட்டாலும் பொறுப்பாகப் பதில் சொன்னான். "யாருக்குடி தெரியும்?" அவளுக்குத் தெரிந்த வரையில் புருஷன் என்பவன் வெறும் "ஆண்பால்"; அவ்வளவுதான். மற்றபடி புருஷனுக்குள்ள பொறுப்புகளும் கடமைகளும் பாவம் அவனுக்குப் புரிபடவே இல்லை!

ஏதோ தேயிலைக் கம்பெனியில்

கௌரவமான வேலை என்று பெண் கேட்டார்கள். எதற்கும் மலை இறங்கத் தேவையில்லை என்றார்கள். அப்படித் தான் திருமணம் ஆயிற்று! ஐந்து வருட கல்யாண வாழ்க்கையில் முதல் பிரச வத்துக்கு மட்டும் பிறந்த வீட்டுக்குப் போக முடிந்தது.

பஸ்ஸுக்குச் செலவழிக்கும் பைசா இருந்தால் பத்து நாளைக்கு அடுப்பெரியும் என்ற உண்மை, ஊர் ஆசையை ஊதித் தள்ளியது.

கையில் ஒன்று, இடுப்பில் ஒன்று, வயிற்றில் ஒன்று என்று வரிசையாக வாரிசுகள்.

**போ**கும்போதும், வரும்போதும் ரேஷன் கடை பார்த்து கண் கலங்கி, பார்ப்பவர்களிடமெல்லாம் குடும்ப அட் டைக்காகக் கையேந்த ஆரம்பித்தாள்! ஆளாளுக்கு அங்கே, இங்கே கை காட்டி அலைக்கழித்து கடைசியில் ரேஷன் கடையிலேயே வேலை பார்க்கும் ஏஜண்ட் ஒருவனிடம் இவளைத் தள்ளி விட்டார்கள்!

அவன் அப்ளிகேஷனைப் பூர்த்தி செய்து கை நாட்டு வாங்கிக் கொண் டான். தொகையைச் சொல்லி, தோது படாவிட்டால் குடும்ப அட்டை 'கோவிந்தா' தான் என்பதையும் கறாராகச் சொல்லி விட்டான்!

இவள் விஷயத்தைப் புருஷனிடம் சொல்லப் போக, அவன் இவளுடைய விதியை நினைத்துச் சிரித்தபடி "காசுக்கு என்னடி பண்ணப் போற?" என்று கேட்டான்.

அவள் நம்பிக்கை இழக்கவில்லை - மாதா கோயில் சாமியார், மளிகைக் கடை நாடார், காரை வீட்டுப் பெரியவர், ஃபேக் டரி சூப்ரவைசர் என அனைவரிடமும் பேசிப் பார்த்தாள்; பலன் இல்லை. எஸ்டேட்டில் தேயிலை பறிக்கும் வேலை தேடி, ஜெயித்துக் காட்டினாள்.

அதற்குப் பின் நாளா, கிழமையா, இரவா, பகலா எதுவுமே அவளுக்குப் பொருட்டாகத் தெரியவில்லை. இலையும், எடையும், காசும் மட்டுமே கண்களில் தெரிந்தன! புருஷனின் ஏளனமும், எகத் தாளமும், சம்பாதனையில் கை வைக்கும் திருட்டுத் தனமும் அவளைப் புரட்டிப் போடவில்லை. தேயிலைச் செடிகளின்



மூட்டத்தில், உடம்பில் ஒட்டிக்கொண்டு இரத்தம் உறிஞ்சும் அட்டைப் பூச்சிகளின் ஆவேசம் கூட அவளை அதிர்ச்சிக்குள் ளாக்கவில்லை!

காசைப் புரட்டி, கப்பம் கட்டி, முகப்பில் கட்டம் கட்டி இவளுடைய போட்டோ ஒட்டிய ரேஷன்கார்டை வாங்கியே விட்டாள்!

"அட்டையில உம் போட்டாவ போடறதுக்காடி குடும்பத் தலைவன்னு இங்க நான் ஒருத்தன் கும்மியடிச்சுக்கிட்டு இருக்கேன்."

புருஷன் பொங்கி வெடித்தும் கூட முதன்முறையாக வாங்கப் போகும் ரேஷன் பொருள்கள் மட்டுமே அவள் நினைவில் நீந்திக் கொண்டிருந்தன! ஆனால்.... அதை வாங்குவதற்குப் பணம்?

நேற்றிரவு... தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தவளின் கெண்டைக்கால் களை முரட்டுக்கரம் ஒன்று வாஞ்சை யாகத் தடவிக் கொடுத்தது. இதுவரை காணாத கரிசனம் தெரிந்தது அந்த ஸ்பரிசத்தில்! அட்டை கடித்துக் கன்றிப் போன கால்சதையை நீவிக் கொடுத்தான் மலைச்சாமி. "ரொம்ப கஷ்டப்பட்டுப் போயிட்டே புள்ளே.... நான்...." என்று திக்கித் திக்கிப் பேசியவன், விருட்டென்று நூறு ரூபாய்த் தாளை எடுத்து அவளிடம் நீட்டினான்! "விடிஞ்சதும் நான் போயி வரிசையில நிக்கறேன் - நீ வந்துடு."

அவளுக்குக் கண்ணீர் முட்டியது! வாஞ்சையோடு அவன் தலையைப் பற்றிச் செல்லமாக உலுக்கினாள்! இரவு எந்த நேரம் தூக்கம் வந்தது என்பது இருவருக் கும் தெரியாது!

**அ**வள் மாதா கோயிலை நெருங்கிய போது, அவன் மூச்சிரைக்க மேடேறிக் கொண்டிருந்தான். கீழே பள்ளத்தில்

"நீங்க 'பறக்கும் தட்டு' பார்த்திருக்கீங் களா...?"

"கல்யாணத்துக்கு முன்னாடி பார்த்த தில்லை. இப்போ தினமும் எங்க வீட்டுல பார்க்கறேன்..!"

- குட்டி பிரசன்னா

ரேஷன் கடை வாசலில் எறும்புக் கூட்ட மாய் ஜனங்கள்!

"எடம்போட்டு வச்சிட்டேன் புள்ளே" உற்சாகமாய்க் கூவியவன் அவள் இடுப்பில் இருந்த குழந்தையை வாங்கிக் கொண்டான்.

அக்கம்பக்கத்துக் கிராமத்து ஜனங்கள் அத்தனைபேரும் ஆச்சர்யமாய்ப் பார்க்க, கண்ணம்மா வரிசையில் நின்றாள்! வரிசை நகர நகர அவள் வயிற்றில் பூச்சி கள் பறந்தன. காசும் கார்டும் இருக்கின்ற னவா என்று உறுதி செய்து கொண்டாள்!

குழந்தைகளுக்குத் தீனி வாங்கிக் கொடுத்துவிட்டு, இவளுக்கு ஸ்பெஷல் டீயோடு வந்து நின்றான் மலைச்சாமி! இவள் மறுக்க மறுக்க, வலிய டம்ளரை இவள் கையில் திணித்தான். அவன் பெருமை பொங்கப் பார்த்துவிட்டு தலை குனிந்து நாகக்காய் டீ உறிஞ்சினாள்.

அவள் பில்போட்டு மீண்டு வந்து, எடைபோடும் இடத்துக்கு வரவும், மலைச் சாமி பைச் சுருணையை வாங்கி விரித்து, தனித்தனியாகப் பொருள் வாங்க உதவி செய்தான். எல்லாவற்றையும் பாந்தமாகக் கட்டி எடுத்து முடிப்பதற்குள் வானம் இருட்டிக் கொண்டு வந்தது.

ரேஷன் கடையைத் தாண்டி ஊருக் குள் போக மேடேறும் இடத்துக்குச் சற்றுத் தள்ளி டெண்ட் போட்டிருந்த பகுதியில் கும்பலாக நிறைய பேர் நின்றி ருந்தார்கள். பக்கவாட்டில் ஒரு டெம்போ வேனில் அரிசி முதலான ரேஷன் பொருள்களை மூட்டைகளாகக் கட்டி ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

மலைச்சாமி தயக்கமாய் நின்றான்! கண்ணம்மா குழப்பமாய் அவனைப் பார்த்தாள்! வேகமாய் வந்த, கனமாய் மீசை வைத்த ஆள் மலைச்சாமியைப் பார்த்து, "சீக்கிரம் மலைச்சாமி! மழை வரும் போல இருக்கு!" என்று கை நீட்டி னான்! திருதிருவென விழித்த மலைச்சாமி "அண்ணே நீங்க போங்க! நான் எடுத் தாரேன்" என்றான்!

"ரேஷன் கார்டைக் குடு புள்ளே, இந்தக் கருமத்தோட கார்டையும் குடுத் துட்டுச் சுருக்க வந்துடறேன்" குழந்தை களை இறக்கி விட்டுவிட்டு மூட்டை களைச் சுட்டிக்காட்டியபடி அவற்றைத் தூக்கினான்! கண்ணம்மாவின் தலை சுழன்றது! காலுக்கடியில் தரை நகர்ந்து தலைகுப்புற விழுவது போல உணர்ந் தாள்! ரேஷன்கார்டை நெஞ்சோடு இறுக்கிக் கொண்டு "என்னய்யா சொல்றே!" என்று வீறிட்டாள்.

"கத்தாதே புள்ளே; எல்லாரும் இதைத்தான் செய்யறாங்க! அட்டையை அடகு வச்சு காசு வாங்கறது புதுசில்லே! ரேஷன் வாங்க அவங்களே காசு குடுக்க றாங்க! கார்டையும் பொருளையும் குடுத் துட்டா லாபக் காசை உடனே குடுத் துடுவாங்க! பாரு - நேத்தே எனக்கு நூறு ரூபா குடுத்துட்டாங்க! அப்பப்ப செலவுக் கும் பணம் வாங்கிடலாம் - கார்டு பத்திரமா அவங்ககிட்டேயே இருக்கும்! நம்மகிட்டே இருந்தாக்கூட தொலைஞ்சு போயிருமில்லையா?"

கண்ணம்மாவுக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. படபடவென்று மார்பில் பறையடித்து, குளிரிலும் வியர்த்தது.

"யோசிக்காதே புள்ளே - வெறும் அரிசியை வாய் ஏற்குமா? அதை வேக வைக்க, விறகு வாங்க காசிருக்கா? பாரு நூறு ரூபா; இன்னிக்கு பிரியாணியே சாப்பிடலாம். அட்டையைக் குடு புள்ளே." மலைச்சாமி கெஞ்சினான்; கொஞ்சினான்; கத்தினான்; அவள் தலை முடியைப் பிடித்து உலுக்கி அறைந்தான்; அவள் அசையவில்லை; இறுக்கிப் பிடித்த ரேஷன் கார்டை விடவில்லை. காற்றின் சாரல் அவள் முகத்தில் காறித் துப்பியது. முடுக்கிவிட்ட பொம்மை போல வேக மாக நகர்ந்தாள். மலைச்சாமி கத்துவதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் நடந் தாள்.

சாலையின் ஓரத்தில் சுள்ளிகளைக் காவு கொடுத்து மூட்டிய தீயில் சிலர் குளிர்காய்ந்து கொண்டிருந்தார்கள். கண்ணம்மா அங்கே நிமிஷ நேரம் நின்றாள்! இறுக்கிப் பிடித்திருந்த குடும்ப அட்டையை அந்தத் தீயில் விட்டெறிந் தாள்; அது சுருங்கி, மடங்கிக் கருகிக் கொண்டிருப்பதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்!

# "வரம்பு மீறமாட்டோம்!"

என்ன, விஜய் டீ.வியில ஒளிபரப்பாகிற 'கண்ணாடி கதவுகள்' சீரியல் சூடு பறக்கப் போயிட்டிருக்கா, போனவாரம் ஆறு கதாநாயகிகளும் ஆளாளுக்குத் தங்களை அறிமுகப் படுத்திக்கிட்டாங்க. இந்த வாரம் உங்ககிட்டே பேசப்போறது இயக்குநர் கவிதா பாரதியும் சீரியலோட இசையமைப்பாளர் ராஜேஷ் வைத்யாவும்.

**ராஜேஷ் வைத்தியா** *(இசையமைப்பாளர்):*

குட்டி பத்மினியோட சீரியலுக்கு முதன்முறையா இசையமைக்கிறேன். நான் எவ்வளவோ சீரியலுக்கு இசையமைச்சிருந்தாலும் இதுலதான் நான் முதன்முறையா பாடியிருக்கேன். சைந்தவியோட இணைஞ்சு நான் பாடின டைட்டில் சாங்குக்கு இப்போ பலரும் ரசிகர்கள். நான் உருவாக்கிய ராகமே என்னை ஈர்த்துப் பாடவைச்சிருச்சு. இதுவரைக்கும் இருபத்தைஞ்சு சீரியல்கள் பண்ணியிருக்கேன். அந்த அனுபவத்துல சொல்றனே. சினிமா பாட்டு அளவுக்கு இன்னைக்கு சீரியல் பாடல்கள் பிரபலமாயிட்டு வருது. அந்த உயரத்தை 'கண்ணாடி கதவு' பாட்டும் நிச்சயம் எட்டிப் பிடிக்கும்.

**கவிதா பாரதி** *(இயக்குநர்):*

மெகா சீரியல்கள்தான் இன்றைய தமிழ்நாட்டுப் பெண்களோட முக்கியமான பொழுதுபோக்கு. அவர்களுடைய பெரும்பாலான ஓய்வு நேரம் சீரியல்கள் பார்ப்பதில் செலவழிக்கப்படுகிறது. எழுபதுகளில் எப்படி ரேடியோ ஒரு பொழுதுபோக்குச் சாதனமா இருந்ததோ அதுபோல இன்றைக்கு டீ.வி அதிலும் மெகா சீரியல்கள்.

மக்களுக்குப் புனைவுக் கதைகள் மீது எப்பொழுதுமே ஒரு ஆர்வம் இருக்கும். முன்பு பத்திரிக்கையில் தொடர்கதைகளாகப் படிச்சுட்டு வந்த கதைகளை இப்போது விஷுவலா பார்த்து வருகிறார்கள்.

கண்ணாடிக் கதவுகளுக்காக இதுவரைக்கும் நானூறு எபிசோடுகள் திட்டமிட்டிருக்கிறோம். கதையும் முக்கியக் கதாபாத்திரங்களின் வாழ்க்கைப் பயணமும் இப்பொழுதே திட்டமிடப்பட்டுவிட்டன.

சீரியல் இண்டஸ்ட்ரி ஆரோக்கியமான வளர்ச்சியை நோக்கிப் போயிட்டிருக்கு. சீரியல் பார்க்கிற கூட்டம் ஒண்ணும் பெருசா வளர்ந்துட்டு வரலை. ஆனா இருக்கிற கூட்டத்தைத் தக்கவைச்சுக்கணும். அதுதான் இங்கே முக்கியம். சீரியல்களில் வருகிற கதைகள் அனைத்தும் ஏற்கெனவே சொல்லப்பட்டவைதான். சொல்லப்படும் விதத்தில்தான் ரசிகர்களைக் கவர்ந்திழுக்கும் ட்ரிக் உள்ளது.

சினிமாவுல எப்படி ஹீரோவுக்கென்று ஒருவித தனி இமேஜ் இருக்கோ, அதேபோல சீரியல்களிலும் ஹீரோயினுக்கென்று ஓர் இமேஜ் இருக்கு. அதனால பெருசா பரிக்ஷார்த்த முயற்சிகள் எதுவும் பண்ண முடியாது. ஆனா மற்ற கேரக்டர்ல தைரியமா வித்தியாசம் காட்டலாம். எப்படி, சினிமாவுக்குக் கல்லூரி இளைஞர்கள்

கல்கி வாசகர்களுக்கு,

கண்ணாடி கதவுகள் சீரியலைத் தொடர்ந்து பார்த்துவிட்டு, அதற்குரிய விமர்சனத்தை கல்கியில் வெளியாகும் கூப்பனுடன் இணைத்து அனுப்புங்கள். அடுத்த வாரத்திலிருந்து உங்களுக்கு ஓர் ஆச்சர்ய மான பரிசு காத்திருக்கிறது. சிறந்த விமர்சனம் எழுதும் கல்கி வாசகர் ஒருவருக்குத் தங்க நாணயம் பரிசாக அளிக்கப்படும்!

பெரும்பான்மையான ரசிகர்களாக இருக்கிறார்களோ அதுபோல சீரியல்களுக்குப் பெண்கள். இதனால்தான் அவர்கள் வாழ்க்கையை ஹீரோயின் கதாபாத்திரம் வழியாகச் சொல்லி டீ.வி முன்பு கட்டிப்போடுகிறோம்.

கண்ணாடி கதவுகளிலும் முறை தவறிய கதாபாத்திரங்கள் உண்டு. இதுபோன்ற கதாபாத்திரங்கள் எப்போதும் வெகுவாக விமர்சிக்கப்படுவதுண்டு. பொதுவாகவே வெகுஜன மீடியாவுக்கு வியாபார நோக்குமுண்டு. இதனால் விமர்சனங்களிலிருந்தும் யாரும் தப்ப முடியாது. முறைதவறிய கதாபாத்திரங்கள் கம்பராமாயணத்திலும் உண்டே. ஒரு நல்லதைக் காண்பிக்கும்போது கெட்டதையும் காண்பித்தாகவேண்டிய கட்டாயத்தில் கதாசிரியர்கள் உள்ளோம்.

நாகரிகம் சீரியலில் கட்டாயம் காப்பாற்றப்படும். வரம்பு மீற மாட்டோம். குடும்பமாக உட்கார்ந்து சீரியலைப் பார்க்க வேண்டும் என்பதுதானே எங்களுடைய நோக்கம்!

அடுத்த வாரம் முதல், கண்ணாடி கதவுகள் எப்படிப் போகுமோங்கிற பதைபதைப்பு கொஞ்சமும் வேண்டாம். வாரா வாரம் 'கண்ணாடி கதவுகள்' சீரியலோட கதை ஓட்டத்தைக் கல்கியிலேயே பார்க்கலாம், முன்கூட்டியே!

- சநகன்



• கவிதா பாரதி

## பாலிடிக்ஸ் பஜார்

• "அ.தி.மு.க., தே.மு.தி.க. போன்ற கட்சிகள் வன்னியர் வாக்கு வங்கியைக் குறிவைத்து அந்தக் கட்சிப் பிரமுகர்களுக்குக் கட்சிப் பதவி கொடுத்து, ஜாதி செல்வாக்கு மிக்கவர்களை வளைத்துப் போட்டு விடுகின்றன. ஆனால், உங்களால் நமது வன்னியர் வாக்கு வங்கி சரிகிறது..." என்று அமைச்சர் பொன்முடியை கலைஞர் கடிந்து கொண்டதாகச் செய்திகள் கசிகின்றன. விவகாரம் இதுதான்: உட்கட்சி மோதலில் பொன்முடிக்கு எதிரியானார் வன்னியர் செல்வாக்கு பெற்ற ஏ.ஜி.சம்பத். அவரது முகையூர் தொகுதியைச் சாணக்கியமாக பா.ம.கவுக்கு ஒதுக்கி அவரை ஓரம் கட்டினார் பொன்முடி. வெகுண்டெழுந்த சம்பத் சுயேச்சையாகப் போட்டியிட்டுத் தோற்றார். இப்போது சுமார் 2000 தொண்டர்களுடன் அவர் விஜயகாந்த் கட்சியில் இணைந்து விட்டார். இதற்கு முதல்வரின் ரியாக்ஷன்தான் முதல் நான்கு வரிகளில் இருப்பது.



• ஜி.கே.வாசன்



• ஏ.ஜி.சம்பத்

• திருவல்லிக்கேணி தொகுதியில் நின்று வெற்றி வாய்ப்பை இழந்தாலும், தமது கல்வித் தகுதியாலும், நெருக்கத்தாலும் கலைஞரால் திட்டக் கமிஷன் துணைத் தலைவராக்கப்பட்டார் நாகநாதன். ஆனால் அவர் தமது அதிகார வட்டத்தை எல்லையில்லாமல் விஸ்தரித்துக் கொண்டு போவதால் கோட்டை அதிகாரிகள் – குறிப்பாக நிதி மற்றும் வருவாய்த்துறை அதிகாரிகள் மட்டத்தில் 'இவர் என்ன சூப்பர் நிதியமைச்சரா?' என்று முணுமுணுப்பு கேட்கிறது.

• காங்கிரஸில் உட்கட்சி மோதல் உச்ச கட்டத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. தலைவர்

# முதல்வரின் ரியாக்ஷன்!



• பொன்முடி

கிருஷ்ணசாமி, "மாவட்டத் தலைவர்கள், மற்றும் மாநில நிர்வாகிகளை மாற்ற வேண்டும்" என்று மேலிடத்தில் கொடுத்த பட்டியலுக்கு வாசன் தரப்பு கட்டையைப் போட்டு விட்டதாம். 'எல்லாத் தரப்புகளிலிருந்தும் ஆட்களைப் போட்டுத்தான் பட்டியல் தயாரிக்கப்பட்டது' என்று கிருஷ்ணசாமி தரப்பு சொல்கிறது. "அமைச்சர் பதவியை வாசன் ஏற்றுக் கொண்டிருக்கக் கூடாது; எங்கள் நலன்களைக் கவனிக்க அவர் கட்சித் தலைவராகவே தொடர்ந்திருக்க வேண்டும்" என்று சொல்கிறார்கள் வாசன் ஆதரவாளர்கள்.

- சஞ்சயன்

# தீராப்பகை

சூர்யன்



ஆதியில் நீ
கழுகாயிருந்தாய்
உன்னால் கதறக் கதற
தூக்கிச் செல்லப்பட்ட
கோழிக்குஞ்சாய் நான்

பின்பொருமுறை
பெண்புலியாய் வந்தாய்
இதயம்பதற மிரண்டோடும்
மானாயிருந்தேன்

முன்ஜென்மத்தில்
என்வழியில் நீ
எதிர்ப்பட்டாய் கீரியாய்
நான் படமெடுத்துச் சீறினேன்
உனக்கெதிரே

இன்னும்
தீரவில்லைபோலும்
உன் பகை - இம்முறை
என்வழியில்
கண்ணி வைத்துக் காத்திருக்கிறது
உன்னழகு!



# சம்திங் சம்திங் உனக்கும் எனக்கும்!

ராமராஜனுக்குப் பிறகு தமிழ் சினிமா சரித்திரத்திலேயே மாடுகளோடு இவ்வளவு இணக்கமாக நடித்தது ஜெயம் ரவியாகத்தானிருக்கும். சூடாக வந்து விழும் சாணியைக் கேட்ச் பிடிக்கிறார். பாட்டுப் பாடி பால் கறக்கிறார். த்ரிஷா எங்காவது தென்படுகிறாரா என்று ஓரக் கண்ணில் நோட்டமிட்டுக் கொண்டே தொழுவத்தைக் கூட்டிப் பெருக்குகிறார். இவ்வாறாக தொழுவத்தில் வேலை செய்து, ஏர் பிடித்து, வியர்வை சிந்தி, த்ரிஷாவை ஒரு வெளிநாட்டு இளைஞர் எப்படிக் கைப்பிடிக்கிறார் என்பதை இன்னும் கொஞ்சம் மண் வாசனையோடு சொல்லியிருந்தால் பொழுதுபோக்கு என்கிற விஷயத்தையும் தாண்டி, படம் இன்னமும் ஆழமாக மனத்தில் நின்றிருக்கும்.

தான் செய்யும் குறும்புகளை ஓவர் ஆக்டிங் வழியாகவே வெளிப்படுத்தியிருக்கிறார் ரவி. ஆரம்பத்தில் கதாநாயகனோடு மோதுவதும் பின்னர் காதலுக்காக ஏங்குவதும், உருகுவதும் காதல் படங்களுக்கே யான இலக்கணம். இதில் த்ரிஷா கேரக்டர் இம்மி பிசகவில்லை. சொற்ப நிமிடங்களே வந்தாலும் காமெடியில் ரகளை பண்ணுகிறார் லிவிங்ஸ்டன். ஆனால் படம் முழுக்க வந்தும் செயலற்றுக் கிடக்கிறார்கள் கஞ்சா கருப்பும் சந்தானமும். பிரபுவின் பாத்திரம் (மட்டும்) நன்றாக வார்க்கப்பட்டிருந்தாலும், அதுவும் போகப்போக சினிமாத்தனமாகி விடுகிறது.

தேவிஸ்ரீ பிரசாத்தின் பாடல்கள் இதம். வெங்கடேஷின் கேமராதான் படத்தின் பெரிய பலம். ரிச்சா பலோட் வீடு, மலைக் கோயில் எல்லாம் பக்கா சினிமா செட்டுகள். கதை முழுக்க கிராமத்தில் நடக்கிறதாம். ஆனால், ரிச்சா பலோட்டின் திருமண நிகழ்ச்சிகளில் நடக்கும் பார்ட்டி, கூத்துகளெல்லாம் சென்னையில்கூட நடக்காது.

இன்டர்வெலுக்குப் பிறகு நடக்கும் காட்சிகளில் ஒன்று கூட புதிது இல்லை. தமிழ்ச் சினிமா முன்னேறிவிட்டது என்று காலரைத் தூக்கிக் கொள்ள முடியாத ஒரு 1980 படம் பாணியிலான க்ளைமாக்ஸ். ரவிக்கு வலை விரிக்கும் தேஜாஸ்ரீயும், த்ரிஷா மீது ஆசைப்பட்டு ஏமாந்துபோன ஊர்க்காரர் ஒருவரும் போட்டிப்போட்டுக் கொண்டு செய்யும் விஷமத்தனங்களும் பழைய பாணிக்குக் கொஞ்சமும் குறைந்ததில்லை.

ஜெயம் யூனிட், அடுத்த முறையாவது புதிய கதை, புதிய கதாபாத்திரங்கள் மற்றும் வித்தியாசமான காட்சி அமைப்புகள் போன்ற பின்புலங்களோடு ரசிகர்களைச் சந்திக்க முயற்சி செய்யலாம்.

- லஜ்ஜாவதி

# சாசனம்

இயக்குநர் மகேந்திரன் தமிழ் சினிமாவிலிருந்து ஒதுங்கிய பிறகு நகமும் சதையுமான கதைகள் தமிழ் சினிமாவைவிட்டு ரொம்பத் தூரம் போயிருச்சு. அந்த வெற்றிடத்தை 'சாசனம்' வந்தாவது நிரப்பாதாங் கிறதுதான் ரசிகர்களோட முதல் எதிர்பார்ப்பு.

அர்விந்த்சாமி ஊர் மதிக்கும் (சிறு வயதுப்) பெரியவர். அவர் மனைவி கௌதமி. குடும்பச் சுமை காரணமாகப் பணக்காரருக்கு தத்துக் கொடுக்கப்பட றாரு அர்விந்த்சாமி. குடும்பம் பிரியுது. இந்நிலைமையில் அவர் தந்தையை நம்பி ஊருக்கு பிழைப்புத் தேடி வர்ற ரஞ்சிதா வையும் அவர் அம்மாவையும் தன் பாது காப்புல வைச்சுக் காப்பாத்துறாரு. அதுக் குள்ளே கண்ணு, காது, மூக்கு வைச்சு ஊருக்குள்ளே பேச்சு எழும்புது. இதுக்கு மதிப்புக் கொடுக்கும் விதமாவோ என்னவோ அர்விந்த்சாமியும் தன் தந்தை இறந்த அன்றே ரஞ்சிதாவோடு ரகசியமா உறவு ஏற்படுத்திக்கிறாரு. அப்புறம்... இதைத்தான் ஆற அமரச் சொல்லுது 'சாசனம்.'

ஒவ்வொண்ணும் ஆழமான கதா பாத்திரங்கள். அர்விந்த்சாமியோட கிளைக்கதையே நெஞ்சைக் கனக்க வைக் குது. முதன்முறையா தம் அழகை மட்டு மில்லாம நடிப்பையும் சேர்த்து ரசிக்க வைச்சிருக்காரு அர்விந்த்சாமி. ஆரம்பக் காட்சிகள்ல சாதுவா, வர்ற கௌதமி, ரஞ்சிதா வலையில தம் கணவர் விழுந்த பிறகும் அதே சாதுவா பண்பானவரா இருக்கிறது. பெண்ணடிமைக்கான சாசனமா அல்லது பொறுமையின் சிகர மான்னு புரியலை.

படத்துல ஒரே காமெடி ஸீன், ரஞ்சிதா நாட்டியம் ஆடறதுதான். ரஞ்சிதாவோட கள்ளத் தொடர்பைத் தெரிஞ்சுக்கிட்டு அவங்க அம்மா காணாமப் போனதை ரஞ்சிதா ஜஸ்ட் லைக் தட்டா எடுத்துக் கிடறது உறுத்துது.

ஒரு விஷயத்தை வலுவாச் சொல்ல இயக்குநருக்கு நாலைஞ்சு ஸீன் தேவைப் படுது. இது எந்த மாதிரியான திரைக்கதை யுக்தி? இன்னமும் கூர்மையான வசனங் களால் காட்சிகளைப் பதிவு செய்திருக் கணும். இசை படத்தை மேலும் சோர் வாக்குது. செட்டிநாட்டு அடையாளங் களை படத்தின் பின்னணியாக்கிய டிராஸ்ட்கி மருதுவோட கலை இயக்கம் யதார்த்தத்தின் உச்சம்.

சாசனம் - கலைப்படப் பிரியர்களின் தாகத்துக்கேற்ற இளநீர்.

- லஜ்ஜாவதி



# கலங்கத் தேவையில்லை!

## - திருப்பணிக்குழு விளக்கம்

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் திருக்கோயில் கும்பாபிஷேகம் திட்டமிட்டுள்ளபடி ஆகஸ்ட் 31ஆம் தேதி நடைபெறுமா? என்று சந்தேகம் எழும்படியாக கடந்த இதழில் ஒரு கட்டுரை வெளியிட்டிருக்கிறீர்கள். அதில் அறங்காவலர் குழுவின் தலைவரான பஞ்சாட்சரத்தின் கருத்துகளையும் கேட்டறிந்து வெளியிட்டிருப்பினும், திருப்பணிக் குழுவின் சார்பில் இன்னும் சில விளக்கங்களை அளிக்க விரும்புகிறோம்.



* சீரமைக்கப்பட்டுவரும் திருக்குளம்

ராஜகோபுரப் பணிகள், விமானப் பணிகள், சிவகங்கை மற்றும் கம்பாநதி திருக்குளப் பணிகள், ஆயிரம்கால் மண்டபம் மற்றும் இரட்டைத் திருமாளிகை என்று பல்வேறு பணிகளும், திருப்பணிக் குழுவின் ஆலோசனைப்படி சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருக்கின்றன. தங்கள் நிருபர் வந்து சென்ற பிறகு நடைபெற்றுள்ள பணிகள் கணிசமானவை.

மேலகோபுரத்தை அறநிலையத் துறையும், அதன் ஸ்தபதியும் ஆய்வு மேற்கொண்டு கல்சாரத்தின் உறுதிக்கு உத்தரவாதம் அளித்துள்ளனர். அதில் ஏற்பட்டிருக்கும் மெல்லிய விரிசலை, உயர் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி, தங்களுடைய உபயமாகச் சரி செய்து தர எல் அண்டு டி நிறுவனம் முன்வந்துள்ளது.

இரண்டு திருக்குளப்பணிகளும், ஆயிரம்கால் மண்டபப் பணிகளும் ஆரம்பித்து நடந்து கொண்டிருக்கின்றன. இன்னும் சில நாட்களில் அவை முடிந்துவிடும்.

நீங்கள் குறிப்பிட்டுள்ள மதில் சுவர் சீரமைப்புப் பணி தமிழக அரசின் சுற்றுலாத்துறையின் நிதி உதவியுடன் தனியாகச் செயல்படுத்தப்பட இருக்கிறது. எனவே அதற்கும், கும்பாபிஷேகத்துக்கும் தொடர்பு இல்லை.

3000 ஆண்டுகள் பழைமையான, 1997ஆம் ஆண்டில் பட்டுப்போன மாமரத்திலிருந்து வேளாண் வல்லுநர்கள் யோசனைப்படி அதன் விதைகள் மற்றும் திசு கல்சர் முறையில், அதே மரத்தின் கன்று ஒன்றை உருவாக்கி நட்டதையும், அது இன்று சுமார் ஐந்தடி உயரம் வளர்ந்து நன்றாகப் பராமரிக்கப்பட்டு வருவதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஜூலை 31ஆம் தேதி அவரவர் தாம் ஏற்றுக் கொண்டுள்ள பணிகளை முழுமையாக முடித்து, திருப்பணிக் குழுவிடம் ஒப்படைத்து விட வேண்டும் என்று அறிவுறுத்தி இருக்கிறோம். அதன்பின், திருப்பணிக் குழு, கோயில் கும்பாபிஷேகத்துக்குரிய பணிகளை மேற்கொள்ளவிருக்கிறது. ஆக. 27, வினாயகர் சதுர்த்தியன்று கணபதி ஹோமத்துடன் துவங்கி, 31ஆம் தேதி ஒரு குறையுமில்லாமல், கும்பாபிஷேகம் சீரும், சிறப்புமாக நடைபெறும்.

**- பா.சண்முகம், திருப்பணிக் குழுத் தலைவர், அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில், காஞ்சிபுரம்**

"சார்! ஒரு சின்ன சந்தேகம். அறிவைப் பெருக்கணும்னு சொன்னீங்களே... எத்தனையால பெருக்கணும்...?"

- குலசை க.மீ.நஜ்முதீன்



# அறிவைப் பெருக்கும் வழி!



"ஆபத்து அரசே! உடனே தப்பியோடுங்கள்!"

"எதிரி நாட்டு அரசன் எவனும் திடீர்னு படையெடுத்து வர்றானா?"

"ஊஹூம்... ஆளுயர ஓலைச்சுவடிக் கட்டுடன் புலவர் ஒருவர் உங்கள் முன் கவிபாட வந்திருக்கார்!"

- உ. ராஜாஜி

"மீன் எதுக்கு நல்லது?"

"சாப்பிட்டா கண்ணுக்கு; இல்லேன்னா மீனுக்கு நல்லது!"

- தமிழ் நாயகி





"ஏய்ய்ய்... அந்தப் பள்ளிக் கூடம் பக்கம் போகாதே..?"

"ஏன்?"

"அங்க ஒருத்தரு, 'நீங்க மாடு மேய்க்கத்தான் லாயக்குடா'ன்னு கத்திட்டு இருப்பாரு! நமக்கெதுக்கு வீண் வம்பு?"

- பி.ஜோதிரஞ்சன்

# மணிசங்கர் போட்ட போடு!

வரப்போற 2010-ம் ஆண்டு தலைநகரத்துல நடக்கப்போற காமன்வெல்த் போட்டிகளுக்கு வரும் மக்கள் வெள்ளத்தைச் சமாளிக்க, பல தீவிர நடவடிக்கைகளைச் சுறுசுறுப்பா எடுத்துக்கிட்டு வர்றாங்க டெல்லியில. பேருந்து நிலையங்களுக்கு அடிச்சது யோகம். ஐரோப்பிய நிறுவனங்கள்லருந்து பேருந்து நிலையத்துல வைக்கறதுக்காக, புது மாதிரியான இருக்கைகள், நாற்காலிகளையெல்லாம் வரவழைக்கப் போறாங்களாம். பேருந்து நிலையங்கள் இனி பேர் சொல்லும்படியான நிலைமைக்கு சீக்கிரமே மாறிவிடும். அதே மாதிரி வி.ஐ.பி. பாஸ்’’ன்ற பெயர்ல தலைநகரத்தில் முக்கியமான தலைகளுக்குக் கொடுக்கப்படும் இலவச பாஸை, காமன்வெல்த் போட்டிகளுக்குக் கொடுக்க முடியாதுன்னு சொல்லிட்டார் மத்திய விளையாட்டுத்துறை அமைச்சர் மணிசங்கர் அய்யர். யாராக இருந்தாலும், காசு கொடுத்துத்தான் காமன்வெல்த் போட்டிகளைப் பார்க்க முடியுமாம்.



• மணிசங்கர் அய்யர்

டெல்லி சுவரையெல்லாம் சுத்தமாக வைச்சிருக்கணும், அவற்றின் மேல் போஸ்டர்களை ஒட்டக் கூடாதுன்னு அறிவிச்சிருக்கு டெல்லி உயர்நீதிமன்றம்.

அதுமட்டுமில்ல, தலைநகர ரயில் நிலையங்களில் தயாரிக்கப்படும் உணவு வகைகளின் சுத்தத்தைப் பரிசோதிக்க சமீபத்துல டெல்லி உயர்நீதிமன்றத்துலேர்ந்து ஐந்து பேர் போயிருக்காங்க. சுத்தத்தைப் பற்றி சுத்தமா நாங்க மறந்து பல ஆண்டுகள் ஆச்சுங்கற மாதிரி, அவ்வளவு அசுத்தமா உணவுப் தயாரிக்கும் இடத்தையும், உணவு பதார்த்தங்களையும் கண்டபடி போட்டு வெச்சிருந்திருக்காங்க ரயில் நிலையங்கள்ல. பழைய டெல்லி ரயில் நிலையம், நிஜாமுதீன் ரயில் நிலையம், புது டெல்லி ரயில் நிலையங்கள்ல உணவு தயாரிக்கற முறையைப் பார்த்து 'உவ்வே'ன்னு அலறியபடி வந்திருக்காங்க நீதிபதிகள். மகாத்மா வந்துதான் இந்த மகா அசுத்தங்களைத் திருத்தணும்போல இருக்கு.

- நளினி சம்பத்குமார்



# 'சொர்க்கம்' சொல்வது சரிதானா?

சமீபத்தில் வாசகியொருவர் நமக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதில் "சொர்க்கம் சீரியலில் 'ஹீமோஃபீலியா' என்ற நோயால் பாதிக்கப்பட்டவர், சீக்கிரம் இறந்து விடுவார் என்பது போல் சித்திரித்து வருகிறார்கள். இது முற்றிலும் தவறானது. 'ஹீமோஃபீலியா' உயிர்க்கொல்லி நோய் அல்ல. எனது கணவரும் இந்நோயால் பாதிக்கப்பட்டவர்தான்" என்று கடிதம் எழுதி இருந்தார்.

நாம் அந்த வாசகியை நேரில் சந்தித்து மேலும் விவரங்களைக் கேட்டோம். "இரத்தத்தில் உள்ள ஃபேக்டர் எட்டு, ஃபேக்டர் ஒன்பது குறைவினால் இந்நோய் வருகிறது. ஒரு வகையில் இது பரம்பரை நோய் என்று கூறலாம். ஆனால் உயிர்க்கொல்லி அல்ல. இந்நோயினால் பாதிக்கப்பட்டவரைச் சரியானபடி கவனித்துக் கொண்டால் போதும்" என்றார்.

இவரது கணவர் இப்போது உயிரோடு இல்லை. "ஆனால் அதற்குக் காரணம் வேறு சில உபாதைகள்தான். இது போன்ற காட்சிகளை எடுக்கும்முன் நன்றாக விசாரித்துக் கொண்டு எடுக்க வேண்டுமல்லவா?" என்றார் சமூக அக்கறையுள்ள அந்த வாசகி.

இது குறித்து 'சொர்க்கம்' தொடரின் கதையாசிரியர் பீட்டர் செல்வக்குமாரைத் தொடர்பு கொண்டு கேட்டோம். (நமக்குப் பதிலளித்த சில தினங்களில் அவர் மறைந்து விட்டார்).

"திண்டுக்கல் அருகே நடந்த ஓர் உண்மைச் சம்பவத்தை மையமாக வைத்துதான் இக்காட்சியை எடுத்துள்ளோம். அங்கே கொத்தனாராக இருக்கும் ஒருவரின் மகன் இந்நோயால் பாதிக்கப்பட்டுள்ளான். மகனின் வலியைப் பார்க்க முடியாமல் அந்தத் தந்தை துடித்துக் கொண்டிருக்கிறார். இந்த ஹீமோஃபீலியாவுக்கு இதுவரை மருந்தே கண்டுபிடிக்கப்படவில்லையாம். சமுதாயத்தில் உள்ளதைத்தான் காட்டுகிறோம். எதையும் மிகைப்படுத்திக் காட்டவில்லை" என்று சொன்னார்.

உண்மையிலேயே இது குணப்படுத்த முடியாத நோயா? இதற்கு மருந்தே கிடையாதா?



"முதலில் இதை 'நோய்' என்று குறிப்பிடுவதே தவறு. இரத்தத்தை உறைய வைக்கும் அணுக்கள் இல்லாததால் ஏற்படும் குறைபாடு. அவ்வளவுதான். நிச்சயமாக இது உயிர்க்கொல்லி அல்ல. இதற்கு இந்தியாவில் மருந்ில்லை. ஆனால் வெளிநாட்டிலிருந்து வரவழைத்து சிகிச்சை அளிக்கப்படுகிறது. ஒருமுறை சிகிச்சை அளிப்பதற்கு இரண்டாயிரம் ரூபாய் வரை செலவாகிறது. அதனாலேயே இதை ஏழை மற்றும் நடுத்தர மக்கள் சுலபமாகப் பெற முடிவதில்லை. அவர்களுக்குக் குறைந்த செலவிலோ அல்லது இலவசமாகவோ மருந்து வழங்கும் ஏற்பாடுகளைச் செய்கிறோம். மருந்தின் தேவை அதிகமாக இருப்பதால் சற்று சிரமம் ஏற்படுகிறது" என்கிறார்கள் டாக்டர் மைதிலி மற்றும் டாக்டர் வரதராஜன்.



மேலும் பீட்டர் செல்வகுமார் சொன்ன திண்டுக்கல் சம்பவத்தைச் செய்தித் தாளில் பார்த்ததாகவும் அந்த நபருக்கு சிகிச்சை அளிக்க வேலூர் சி.எம்.சி.யுடன் இணைந்து தகுந்த நடவடிக்கையை எடுத்திருப்பதாகவும் தெரிவித்தனர்.

- ஜயப்பன்

சென்னை சென்ட்ரலில் உள்ள மத்திய சிறைச்சாலையை மிகவும் தாராளமான நிலப்பரப்பில், அதிநவீன பாதுகாப்பு வசதிகளுடன் நிர்மாணிக்கும் பொருட்டு, சென்னைப் புறநகர்ப் பகுதியான புழலில் புதிய சிறைச்சாலைக் கட்டடம் கட்டப்பட்டுள்ளது.

எழுபத்தைந்து கோடி ரூபாய் செலவில் சுமார் 210 ஏக்கர் நிலப்பரப்பில் காவலர் வீட்டு வசதிக் கழகத்தால்




# புழலில் புதிய சிறைச்சாலை... இனியில்லை

பிரம்மாண்டமாகக் கட்டப்பட்டுள்ள இச்சிறை, சிறைவாசிகளை அடைத்து வைக்கும் கட்டடமாக மட்டுமில்லாமல், தியான மண்டபம், நூல் நிலையம், மருத்துவமனை, திறந்தவெளி கலை அரங்கம், உடற்பயிற்சிக் கூடம் என்று பல்வேறு விதமான வசதிகளையும் கொண்டுள்ளது.

தமிழ்நாட்டில் மொத்தம் ஒன்பது மத்திய சிறைகள் உள்ளன. அவற்றில் முக்கியமானது சென்னை மத்திய சிறை. பிரிட்டிஷ்காரர்களால் 1857-ல் கட்டப்பட்டது. சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்துக்கு அருகில், பதின்மூன்றரை ஏக்கர் பரப்பில் அமைந்துள்ள இந்தச் சிறையில், 1419 பேரை மட்டுமே அடைத்து வைக்க அங்கீகாரம் உள்ளது. ஆனால், சென்னை மாநகரின் பல்வேறு நீதிமன்றங்களிலும் நடைபெறும் வழக்குகள் சம்பந்தப்பட்ட விசாரணைக் கைதிகளை சென்னை மத்திய சிறைக்கு அனுப்புவது வழக்கத்தில் உள்ளதால், அங்கு கைதிகளின் எண்ணிக்கை சுமார் இரண்டு மடங்கு ஆகிவிட்டது. சென்னை மத்திய சிறையில், தண்டனை அளிக்கப்பட்ட கைதிகள் அடைக்கப்படுவதில்லை. அவர்களை வேலூர், திருச்சி, சேலம், கடலூர் என்று அனுப்பிவிடுகிறார்கள். எனவே இந்த இடநெருக்கடிப் பிரச்னைக்குத் தீர்வு காணும் விதமாக புழல் பகுதியில் புதிய சிறை கட்ட அரசு முடிவு செய்தது.

சிறைத்துறை இயக்குனர் பா சந்திரன் ஐ.பி.எஸ். அவர்களைச் சந்தித்து புதிய புழல் சிறை பற்றிக் கேட்டபோது "புதிய ஜெயில் வளாகக் கட்டட பணிகள் 2003-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டன. தண்டனைபெற்ற சிறைவாசிகளுக்கு, விசாரணைக் கைதிகளுக்கு, பெண்களுக்கு என்று மொத்தம் மூன்று சிறைச்சாலைகள் தனித் தனியாக

# இடநெருக்கடி!



கட்டப்பட்டுள்ளன. அவற்றில் மொத்தம் மூவாயிரம் கைதிகளை அடைத்து வைக்கலாம்" என்றவர் நம்மிடம் தொடர்ந்து பேசினார்...

"சிறை வளாகத்திலேயே சுமார் நூறு படுக்கைகளுடன் மருத்துவ வசதியும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இப்போது மத்திய சிறையில் இருக்கும் தொழில் மையம், புதிதாக மெஷின்கள் வாங்கப்பட்டு இன்னும் பெரிதாக விரிவுபடுத்தப்பட்டு உள்ளது. கம்ப்யூட்டர் மையம் வரவிருக்கிறது. கைதிகளுக்கான கூடங்களிலும், தனிச் சிறைகளிலும் மின்விசிறி, நவீனக் கழிப்பிட வசதிகள் செய்யப்பட்டுள்ளன. சிறைவாசிகளின் உணவு தயாரிக்கும் சமையல்கூடம்கூட நவீனமாக்கப்பட்டுள்ளது.

விசாரணைக் கைதிகளுக்கான சிறைச்சாலையில் உயர் பாதுகாப்பு மற்றும் தீவிரவாதிகளுக்காக, தனியாகப் பாதுகாப்புத் தொகுதி கட்டப்பட்டுள்ளது. தவிர, சிறு குற்ற வழக்குகளில் ஈடுபட்ட சிறைவாசிகளில், குற்றங்களை ஒப்புக் கொள்ளக் கூடிய சிறைவாசிகளுக்குத் தண்டனை வழங்கும் நீதிமன்றமும், விசாரணைக் கைதிகளை, நீதிமன்றங்களுக்கு அழைத்துக்கொண்டு செல்லாமலேயே விசாரணை கால நீடிப்பு செய்வதற்கு ஏதுவாக வீடியோ கான்ஃப்ரன்சிங் வசதியும் வரவுள்ளன.

பெண்களுக்கான சிறையில், மற்ற சிறைகளில் உள்ள வசதிகளுடன் பெண் கைதிகளின் ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளைப் பராமரிக்கத் தனியாக ஒரு குழந்தைகள் காப்பகம் உள்ளது. மூன்று சிறைகளிலும், மரண தண்டனை பெறும் குற்றவாளிகளை வைப்பதற்காக தனி அறைகளும், தண்டனையினை நிறைவேற்றுவதற்காகத் தூக்குமேடையும் அமைக்கப்பட்டுள்ளன" என்றார்.

"தற்போதுள்ள மத்திய சிறையிலிருந்து, அத்தனை சிறைவாசிகளையும் புதிய சிறை வளாகத்துக்கு மாற்றுவது சிரமமான பணியாயிற்றே?" என்று கேட்டால், "அது காவல்துறையின் பொறுப்பு. தற்போதைய சிறை வளாக நுழைவாயிலில் கைதிகளை, சிறைத்துறை அதிகாரிகள், காவல்துறை வசம் ஒப்படைப்பார்கள். காவல்துறையினர் அவர்களைப் பத்திரமாக புதிய சிறை வளாகத்துக்குக் கொண்டு வந்து, அங்குள்ள சிறைத்துறை அதிகாரிகளிடம் ஒப்படைத்து விடுவர். சிறைவாசிகளை அழைத்துச் செல்வதற்காக பிரத்யேகமான வாகனங்கள் இருக்கின்றன. தீவிரவாதிகள் போன்ற மிகவும் ரிஸ்க்கானவர்களை அழைத்துச் செல்ல லாக்-அப் வசதி கொண்ட வாகனங்கள் உள்ளன" என்றார் பாலசந்திரன்.

"புழல் சிறை செயல்படத் துவங்கி விட்டால், பழைய மத்திய சிறையை என்ன செய்வார்கள்?"

"அதைப் பற்றி அரசுதான் முடிவு செய்ய வேண்டும்."

**- மௌலி**

படங்கள் : **கௌதம்**



# அன்பளிப்பால் வந்த வம்பு!

லஞ்ச ஒழிப்புச் சட்டம் 1988 பிரிவு 12 படி சி.பி.ஐ., ஜெயலலிதா மீது வழக்கு தொடர்ந்துள்ளது. தன்னுடைய பிறந்த நாளன்று ரொக்கமாகவும், டிமாண்ட் டிராஃப்ட், நகைகளாகவும் சுமார் நான்கு கோடி மதிப்புள்ள அன்பளிப்புகளை வாங்கியதாக சி.பி.ஐ. குற்றம் சாட்டியுள்ளது. 1991, 92, 93 ஆகிய ஆண்டுகளில், அவரது பிறந்தநாள் கொண்டாடப்பட்டபோது, தமிழ் நாட்டின் பல்வேறு வங்கிகளில் எடுக்கப் பட்ட சுமார் இரண்டு கோடி ரூபாய் மதிப்புள்ள டிமாண்ட் டிராஃப்ட்கள் அவரிடம் வழங்கப்பட்டுள்ளன என்று தெரிய வந்துள்ளது. அவருக்கு வழங்கப் பட்டவற்றைத் தமது வருமான வரிப் படிவத்தில் 'அன்பளிப்பு'களாக அவர் காட்டியிருக்கிறார்.

பொது ஊழியரான அவர் இப்படி அன்பளிப்புகளைப் பெற்ற விவகாரம் பிரச்னையாக வெடித்துள்ளது. அவருக்கு வழங்கப்பட்ட டிராஃப்ட்களில், பன்னிரண்டு டிராஃப்ட்கள் யார் பெயரில் எடுக்கப்பட்டுள்ளனவோ, அப்படிப்பட்ட நபர்களே இல்லை என்றும் சி.பி.ஐ. கண்டறிந்துள்ளது.

அரசு பதவியைப் பயன் படுத்தி, தனிப் பட்ட முறையில் அடையும் லாபம்தான் லஞ்சம் என்று உலக வங்கி விளக்கம் அளித்துள்ளது. அப்படிப் பார்க்கப் போனால், அன்பளிப்புகளும் ஒருவகை லஞ்சம்தான்.

"லஞ்ச ஒழிப்புச் சட்டம் 1988-ம் ஆண்டு, நம் நாட்டில் கொண்டுவரப் பட்டது. அப்போது சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்கள், அமைச்சர்கள் ஆகியோர் பொது ஊழியர்கள் என்ற வரையறைக்குள் இல்லை. ஹவாலா வழக்கில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு வழங்கிய போது, எம்.எல்.ஏக்கள், எம்.பிகள், அமைச்சர்கள் என்று அனைவரும் இந்தச் சட்டத்தின் பிடிக்குள் கொண்டு வரப்பட்டனர். அரசாங்கத்தில் சம்பளம் வாங்கும் எல்லோருமே பொது ஊழியர்கள்தான் என்று கோர்ட் விளக்கம் அளித்தது" என்கிறார் முன்னாள் தலைமை கண்காணிப்பு கமிஷனரான விட்டல்.

"என் மகன், மகள் திருமணங்கள் பெங்களூரில் நடந்தன. அப்போது, பரிசுப் பொருட்களைக் கட்டாயமாகத் தவிர்த்து விடுங்கள் என்று நான் கூறிவிட்டேன். ஆனால், பின்னர் மத்திய விஜிலென்ஸ் கமிஷன் தலைவரானதும், இந்த விஷயத்தில் நான் என் அணுகுமுறையைத் தளர்த்திக் கொண்டேன். பொதுவாக அன்பளிப்புகள் தருவதைக் குற்றமாகக் கருத முடியாது என்பதே என் கருத்து" என்கிறார் விட்டல்.

வழக்கறிஞரும், விட்டலின் சகோதரருமான ரங்கநாதன், "ஒட்டுமொத்தமாக, பொது ஊழியர் அன்பளிப்பு பெறுவதைக் குற்றம் என்று சொல்லிவிட முடியாது. யார் வாங்கினார்? எப்போது வாங்கினார்? எவ்வளவு வாங்கினார்? கேட்டு வாங்கினாரா? கேட்காமலேயே தரப்பட்டதா? அன்பளிப்பு தந்தவருக்கு, அரசு பதவியை முறைகேடாகப் பயன்படுத்தி சலுகை வழங்கப்பட்டதா? என்று பலவிதமான கேள்விகள் எழும். அவையெல்லாம் சந்தேகத்துக்கிடமின்றி நீதிமன்றத்தில் நிரூபிக்கப்பட வேண்டும்" என்கிறார்.

- கௌதம் ராம்

நூலக ஆண்டுவிழா மாலையில் தொடங்கியது. அக்ரஹாரத் தெருவை இரண்டாகப் பிரித்து மேடையின் முன்பு பார்வையாளர்களுக்கு நாற்காலி, தரையில் உட்கார அவரவர் வீட்டுப் பாய், படுக்கை, ஜமுக்காளம் என்று ஏற்பாடு. மேடையின் பின்புறம் ஒப்பனை அறை, நாடகப் பொருள்கள் வைக்க. நடுவில் படுதா (அதாவது திரை).

இந்த வேலைகள் நடந்து கொண்டிருக் கும்போதே முத்துராக்கு பலப்பல நகைச்சுவைச் சம்ப வங்களைச் சொல்லி எங்களை உற்சாகப் படுத்திக் கொண்டிருப்பார்.

"தம்பி, இந்தத் திரைக்குப் பேரு படுதா. இத வச்சு நம்ப நாடக பூலன்கள் அரு மையான சிலேடை பேசுவாங்க. ஒரு நாடகத்தில் நம்ப கட்டக்குளம் வடிவேலு சீன் முடிஞ்சு உள்ள போகணும். இந்தத் திரை இறக்கிற ஆளு தூங்கிட்டான்.

உடனே வடிவேலு, 'படுதா? அடப் படுதா? நான் பாடுற பாட்டு உங்காதில் இப்பப் படுதா?' என்று பலமுறை பாட, படுதாவை அவசரமாக இறக்கினான் அந்தப் படவா" என்று சொல்ல, நாங்கள் சிரித்தபடி வேலையைச் செய்தோம்.




# வடிவேலு பாடிய படுதா பாட்டு!

'நூலின் பெருமை' 'நூலகங்களின் அருமை' என்னும் தலைப்புகளில் பல அறிஞர்கள் மேடையின் முன்புறம் பேச நாங்கள் காதில் கேட்டுக் கொண்டே நாடகத்துக்குத் தயாரானோம். "புதுமையான நாடகம். புதிய முயற்சி. நாடகத்தின் முடிவு? நீங்களே பாருங்கள்.. உங்கள் முடிவுதான் எங்கள் முடிவு... 'காதலித்துப் பார்' நாடகம்... இதோ உங்கள் முன்னிலையில்..." மணியின் கணீரென்ற குரலோடு நாடகம்





தொடங்கியது.

முதல் காட்சியில் மேடையில், ஒரு நடுத்தரக் குடும்ப வீட்டுச் சூழல். ஒரு பையன் அங்குமிங்கும் நடந்தபடி படித்துக் கொண்டிருக்கிறான். அந்த அறையின் மையத்தில் ஒரு மேஜையும் அதன் மீது அந்தக் கால 'பிலிப்ஸ்' ரேடியோவும் இருக்கின்றன.

(திடீரென்று உள்ளிருந்து ஒருகுரல் கேட்கிறது).

'டேய் சுந்தர், ஒழுங்கா படி... ரேடியோவிலே சினிமாப்பாட்டு, நாடகம்னு கேட்டு நேரத்தைப் போக்காத ஆமா!'

இதைக் கேட்டவுடன் படித்துக் கொண்டிருந்த சுந்தர் புத்தகத்தை வெறுப்போடு மேசையில் வைத்துவிட்டு ரேடியோவைப் போடுகிறான்.

'நாடக விழா... இன்றைய நாடகம்... 'காதலித்துப்பார்' இதில் நடிப்பவர்கள்...' என்று எங்கள் பெயர்களை எல்லாம் சொல்லச் சொல்ல, படத்தில் எழுத்துப் போடுவது போன்ற இசை... சுந்தர் அப்படியே நாற்காலியில் அமர்ந்து நாடகத்தைக் கேட்கத் தொடங்குகிறான். மேடையில் வெளிச்சம் குறைய மீண்டும் வெளிச்சம் வந்தவுடன் ரேடியோ நாடகம் கண்ணெதிரே நிஜமாக நடக்கத் தொடங்குகிறது.

'காதலித்துப் பார்' முதல் காட்சி ரேடியோவில் கேட்கத் தொடங்கி, அப்படியே நிஜமாகக் கண்ணெதிரே நாடகமாக நடக்கத் தொடங்கவும் ரசிகர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள்.

அடுத்த காட்சியில் கதாநாயகன் கதாநாயகியிடத்தில் எத்தனை துன்பம் வந்தாலும், எதிர்ப்பு வந்தாலும் அவளையே திருமணம் செய்வதாகச் சத்தியம் செய்கிறான்.

கதாநாயகனின் அப்பா, (நம்ப முத்துராக்குத்தான்) தான் சொன்ன பெண்ணைக் கல்யாணம் செய்யாவிட்டால் ஊரையே கொளுத்துப் போவதாகச் சபதம் செய்தார்.

('எங்க தெருவ விட்டுட்டுக் கொளுத்துங்க' என்றொருவன் கீழே இருந்து கத்தினான்.)

கதாநாயகனின் தாய், சகோதரன், சகோதரி, தாய் மாமன் அனைவரும் அவரவர் சொன்ன பெண்ணைத் தான் கதாநாயகன் திருமணம் செய்ய வேண்டும் என்று ஆர்ப்பாட்டமாகச் சொல்லியபடி செல்ல, நாடகம் விறுவிறுப்பாக 'கிளைமாக்ஸை' நோக்கிச் சென்றது.

கடைசிக் காட்சி வருமுன், மேடை ஒரு நிமிடம் இருட்டானது.

'சொல்லச் சொல்லக் கேட்காம நாடகமா கேக்குற?' என்று கோபமான குரலோடு ஒரு பாட்டி மேடையில் தோன்றி முதல் காட்சியில் நாடகம் கேட்டுக் கொண்டிருந்த பையனைத் திட்டி ரேடியோவை அணைக்கிறான்.

'பாட்டி, பாட்டி, ஒரு நிமிஷம் இரு நாடகம் முடியப் போகுது. கதாநாயகன் யாரைக் கல்யாணம் செய்துக்கிறான்னு கேட்டுட்டுப் படிக்கிறேன்' என்று பேரன்



"அரண்மனையில் பதுங்கு குழிகள் பயன்படுத்தக் கூடிய நிலையில் உள்ளதான்னு மன்னர் கேக்குறாரே... ஏதாவது படை எடுப்பு நடக்கப் போகுதா?"

"ம்ஹூம்... பொறந்த வீட்டுக்குப் போன மகாராணி நாளைக்குத் திரும்பி வர்ராங்க."

- மு.கஜேந்திரன்

ந்த.

'முடியாது... எவன் எவளைக் கல்யா
ணம் செஞ்சா எனக்கென்ன ஆச்சு?
பாய் ஒழுங்காப்படி. இல்லேன்னா இந்த
ட்டுப் பாட்டி யாருன்னு காட்டிருவேன்'
என்று கத்தியபடி உள்ளே போகிறான்.
அவன் போன திசையைப் பார்த்துக்
காண்டிருந்த பேரன், வேகமாக ஓடிச்
சன்று ரேடியோவைப் போடுகிறான்.

'கட்டுடா, தாலியக் கட்டு' என்று
ரடியாவில் நாடகம் தொடர, நாதஸ்வர
சை கேட்க,

'அப்பாடி! ஒரு வழியா நல்லபடியாக்
ல்யாணம் முடிஞ்சது' என்று எல்லோரும்
ாழ்த்துகிறார்கள்.

'நீங்கள் இதுவரை கேட்டது 'காதலித்
ப் பார்' நாடகம்... இதில் நடித்தவர்கள்,
என்று தொடர,

'அய்யோ, அந்தக் கதாநாயகன்
ாரைக் கல்யாணம் செய்தான்னு தெரிய
லயே' என்று மேடையில் இருந்தவன்
னியே புலம்ப, திரை இறங்குகிறது.

**நா**டகம் பார்த்த பலபேர் பயங்கர
ாகக் கத்தினார்கள். சிலர், 'இதென்ன
டிவே இல்லாம முடிச்சுட்டான்?'
ன்றார்கள். அந்த நாடகம் நடந்த சில
ாட்கள் வரை ஊரே இதுபற்றிப் பேசித்
ரிந்தது.

என்னிடத்தில் இது பற்றிப் பேச பலர்
ட்டுக்கே வந்து விட்டார்கள்.

சினிமா மணியோ கேட்டவர்களுக்கு
ற்றபடி முடிவைச் சொல்லிக் கொண்டி
ந்தான்.

எங்கள் ஊர் நூலகத்தில் எங்களின்
டகம் பற்றிக் கருத்தரங்கமே நடந்து
டிந்தது. இவையெல்லாம் நடந்து
காண்டிருந்தபோது நாங்கள் ஒருநாள்
னிமாமணி வீட்டில் கூடினோம்.

''தம்பிகளா, 'எங்கும் சுதந்திரம்
ன்பதே பேச்சு' அப்படீன்னு பாரதியார்
ாடின மாதிரி, நம்ப நாடகத்தைப் பத்தித்
ான் ஊரெல்லாம் பேச்சு...'' என்றார்
கிழ்வோடு முத்துராக்கு.

''இருந்தாலும் முடிவு என்னான்னு...''
ன்று நான் இழுத்தேன்...

''இல்லைடா, இதுதான் சரி, இன்னிக்கு
ன் ஒரு புத்தகத்திலே சார்லி சாப்ளின்
ந்திப் படிச்சேன். 'அவர் நடித்தது



''நம்ம தலைவர் இன்னும் இலவசக் கலர் டி.வி. அறிவிப்பிலிருந்து விடு படலை...''

''எப்படிச் சொல்றீங்க...?''

''குழந்தைக்குப் பேரு வைக்கச் சொன்னா 'ஒனிடா'ன்னு வைச்சிட்டார்!''

- இ. தங்கமணி

---

ஊமைப் படம்தான்; ஆனால் ஊரெல்லாம் அவரைப் பற்றியே பேசினார்கள்' என்று எழுதியிருந்தார்கள். அது மாதிரி நாம் செய்ததை ஊரெல்லாம் பேச வேண்டும்'' என்று அமைதியாகச் சொன்னான் மணி.

''அதுமட்டுமில்லை தம்பி, சோதனை முயற்சியா நாம சில செயல்களைச் செய்யறதில்லை தப்பில்லை. டைரக்டர் ஸ்ரீதர் கூட, 'நெஞ்சில் ஓர் ஆலயம்' படத்தை முழுவதும் ஒரு ஆஸ்பத்திரியிலேயே வச்சு எடுத்து வெற்றி பெறலையா? ஏன் 'கலைக் கோயில்'னு ஒரு படம் பிரமாதமான கதை, நாட்டியம், இசை, பாலமுரளி கிருஷ்ணவோட 'தங்கரதம் வந்தது வீதியிலே' பாட்டு எல்லாம் இருந்தும் படம் ஓடலை. அதுனால என்ன... புதுப் புது முயற்சிக்கு எப்பவும் வரவேற்பு இருக்கத்தான் செய்யும்'' என்றார் முத்துராக்கு.

'' 'மீண்ட சொர்க்கம்'னு ஒரு படம். அந்தப் படத்திலயும், சிட்டாலின் 'மல்லிகா'ன்னு ஒரு படம் இதிலேயும் நம்ம பத்மினி மிக நல்லா நாட்டியம் ஆடியிருப்பாங்க. ஆனா அந்தப் படங்கள் கூட பெரிய வெற்றியடைஞ்சதுன்னு சொல்ல முடியாது. அது ஏன் தெரியுமா?'' என்றான் மணி.

(ரீல் சுற்றும்)

படம் : புதூர் சரவணன்

● ஆர்.லட்சுமி, மதுரை

? பெங்களூரில் மீண்டும் கால்சென்டர் பெண் படுகொலை...?

! கொலையின் பின்னணியில் ஏதேனும் காரணம் இருக்கலாம். ஆனால், எத்தகைய காரணமும் கொலையை நியாயப்படுத்திவிட முடியாது. கால் சென்டர்களில் பணியாற்றும் பெண்கள் பயந்துபோய் வேலையை விட்டுவிடவும் முடியாது. கால் சென்டர் நிர்வாகம் தான் அவர்களுடைய பாதுகாப்புக்கு - (குறிப்பாக இரவு நேரத்தில்) உத்தரவாதம் அளிக்க வேண்டும். அதற்கேற்ப விதிமுறைகள் அமைத்து அரசு சட்டம் இயற்ற வேண்டும்.

● எம்.ஏழுமலை, அக்ரஹாரம் அஞ்சல்

? எய்ம்ஸ் வேணுகோபால் பதவி நீக்கத்தை வாபஸ் பெறுவதாக மத்திய அரசு உச்சநீதிமன்றத்தில் கூறியதால் அவமானம் யாருக்கு - அரசுக்கா, அன்புமணிக்கா?

! அன்புமணியால் அரசுக்கு.

● குட்டி பிரசன்னா, கரூர்

? வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு மாதந்தோறும் உதவித் தொகை வழங்குவதாக தமிழக அரசு முடிவு செய்துள்ளதே. இது வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்கான நல்ல தீர்வு எனலாமா?

! ஒழிப்பதற்கான தீர்வு அல்ல; வளர்ப்பதற்கான முடிவு!

● டி.எஸ்.சங்கர், இலஞ்சி ★

? ஜனநாயகம் என்பது இந்தியாவின் ஆறாவது விரலா? இதயமா?

! இதயம்தாங்க. என்ன சந்தேகம்...? அதுவும் நல்ல கெட்டியான ஆயுள் உள்ள இதயம். எத்தனை அட்டாக்கைத் தாங்கியிருக்கு; எத்தனை பைபாஸுக்கு ஈடு கொடுத்திருக்கு!

● பெ.பொன்ராஜ், பாண்டி, மதுரை - 16

? அ.தி.மு.க. பொறுப்புள்ள எதிர்கட்சியாகச்

● அல்லாடும் 'ஆதாயம்!'



● பட்ஜெட் அலசல்!



● இம்சை பேச்சு!



# சாமிகள் ஆசாமிகளானால் பிரச்னைதானே...?

செயல்படும் என ஜெ. கூறியுள்ளாரே...?

! சட்டமன்றத்தில் பட்ஜெட் மீதான விவாதத்தில் கலந்துகொண்டு, சொன்னதை நிரூபித்துக் காட்டியிருக்கிறாரே! ஒரே ஒரு குறை; சக்கைப் போடாக, சரமாரியான புள்ளி விவரங்களோடு பேசியவர், அன்பழகனின் பதிலுரைக்குக் காத்திராமல் அவையை விட்டு வெளியேறியது சட்டமன்ற பண்பாடு அல்ல.

• **என்.கோதண்டராமன், மதுராந்தகம்**

? சாமிகள் சாமிகளாக இருக்கும்போது பிரச்னை இல்லையே - ஆசாமிகளாக மாறும்போதுதானே பிரச்னையே ஏற்படுகிறது?

! வெறும் ஆசாமிகளை சாமிகள் நிலைக்கு நாம் உயர்த்தி வைக்கிறபோதும் பிரச்னை ஏற்படுகிறது.

• **ஜோதிகுமார், சென்னை - 106**

? பிரதமர் அலுவலக அதிகாரி ஒருவர் இந்திய அணு ஆயுத ரகசியங்களை அமெரிக்காவுக்கு விற்றதாக ஜஸ்வந்த் சிங் குற்றம் சாட்டுகிறாரே?

! இப்போது அந்த அதிகாரி யார் என்பதை வெளியிட முடியாமல் தவித்து, தமக்கு அவர் பெயர் தெரியாது என ஒப்புக் கொண்டு அசடு வழிந்து கொண்டிருக்கிறார். 'துப்பறியும் சாம்பு' கூட இல்லை; துப்பு கெட்ட சாம்புவாக, பரிதாபமாகக் காட்சி அளிக்கிறார்.



• மெடிகல் பாலிடிக்ஸ்!



• நல்லுணர்வுச் சங்கிலி!

தராசு



• தவிக்கும் சாம்பு!

• **நெ.கோமதி நாயகம், புவனகிரி**

? 'உயிர்' படம் எடுத்தவனை ஓட விட்டு உதைக்கணும் என்று இ.அ.இ.பு. புகழ் வடிவேலு சொல்கிறாரே?... வைகைப் புயல், வானிலே புதிய வைகறையை உண்டாக்குமா?

! 'இம்சை அரசனின்' வசூல் வெற்றி, கொஞ்சம் தேவைக்கு அதிகமாகப் பேச வைத்துவிட்டது அவரை. அது மட்டும் என்ன, குறைகளே காண முடியாத படமா? 'உயிர்' படத்தை விமர்சிப்பதில் தவறில்லை. அதற்காக உயிரை வாங்குவது போலவா

பேசுவது! இதுதான் இப்போதைக்கு இவர் உருவாக்கியுள்ள புதிய வைகறை!

● **க.வேடியப்பன், கும்மிடிப் பூண்டி**

***? அரசியல் வாழ்க்கையில் முதல் சுற்றில் வெற்றி பெற்ற விஜயகாந்தைப் பாராட்டியுள்ளாரே ரஜினிகாந்த்?***

! நடிகர் சங்கத் தேர்தலில் அமோக வெற்றி பெற்ற சரத்குமாரைத் தோளில் கை போட்டுப் பாராட்டி, அந்த நல்லுணர்வை பாஸ் ஆன் செய்துள்ளாரே விஜயகாந்த்.

● **ச.இராசன், திருச்சி** ❏

***? ஆதாயம் தரும் பதவிகள் விதிவிலக்கு மசோதாவை மீண்டும் அப்படியே ஜனாதிபதிக்கு அனுப்பப் போகிறார்களாமே?***

! இதற்குப் பெயர்தான் 'நாடாளுமன்ற சர்வாதிகாரம்!' மெஜாரிட்டி கருத்து என்பது எல்லா நேரங்களிலும் சரியான கருத்தாக அமையும் என்று சொல்ல முடியாது. அதற்காகத்தான் மறுபரிசீலனை செய்யும் அதிகாரம் ஜனாதிபதிக்கு வழங்கப்பட்டது. மசோதாவில் கையெழுத்திடாமல் உச்சநீதிமன்ற அபிப்ராயம் கேட்டு கலாம் அதை அனுப்புவாரா...? பொ.இ.பா.

❏ ரூ.100 பரிசு பெறுபவர் :
**ச.இராசன்,**
29, சுந்தர் ராஜ் நகர்,
திருச்சி - 620 020.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**டி.எஸ்.சங்கர்,**
பெருமாள் கோயில் தெரு,
இலஞ்சி, தென்காசி

● **செல்வக்குமார், முத்தம்பட்டி**

***? சிருங்கார ரசத்தின் தற்போதைய நிலை ஏற்புடையதா?***

! சிருங்கார ரசமாக இருக்கிற வரை அது தற்போதும் எப்போதும் ஏற்புடையதே. சிருங்கார 'விரசமாக' மாறுகிற போதுதான் கண்டனமும் பகிஷ்கரிப்பும் அவசியம்.

● **முகவை முத்துசாமி, தொண்டி**

***? 'குடிபோதையில் வாகனம் ஓட்டினால் லைசென்ஸ் ரத்து' என்று தமிழக அரசு எச்சரித்துள்ளதே?***

! ஓட்டுநர் குடித்திருப்பதை நிரூபிக்கக் கருவி இருக்கு. அதைக் கணிசமான அளவில் காவல்துறை வாங்கணும். திடீர் சோதனைகள் நடத்தணும்; லஞ்ச ஊழலுக்கு இடம் தராமல் இருக்கணும். தண்டனை பெற்றுத் தரணும்; தண்டனை கடுமையாக்கப்படணும்.... - இப்படி ரொம்ப விஷயங்கள் இருக்குங்க. ஆனா, நம்ம அரசு என்னன்னா டாஸ்மாக் கடைகளில் விற்பனை இலக்கை உயர்த்துது. கூட்டம் சேருமிடத்திலெல்லாம் டாஸ்மாக் சரக்கை விற்கச் சொல்லுது! வெட்கக் கேடு!

● **கே.துரைசாமி, மங்களப்பட்டி**

***? ஆசை என்பது மனிதனுக்கு மட்டும் சொந்தமா? எல்லா உயிர்களுக்கும் பொதுவானதா?***

! மற்ற உயிர்களுக்கெல்லாம் இருப்பது உணர்வின் உந்துதல் மட்டுமே. மனிதனுக்குத்தான் அவ்வுணர்வை நெறிப்படுத்தி, குறிக்கோளாக்கி அடைவதற்கான உயர் அறிவு உண்டு.

● **ஜி.குப்புசாமி, சங்கராபுரம்**

***? சிறுதாவூர் நிலப் பிரச்னை குறித்த விசாரணை கமிஷனை ஜெ. வரவேற்கிறாரே...?***

! வரவேற்றுப் பேசுவது அரசியல் ராஜதந்திரம். விசாரணை முடிவு சாதகமாக இருந்தால், "நான்தான் அப்பவே சொன்னேனே..." எனலாம். விசாரணை முடிவு பாதகமாக அமைந்து, அதன் அடிப்படையில் அரசு வழக்கு தொடர தீர்மானித்தால் அப்போது நீதிமன்றத்தில் அதை ரப்பராக இழுத்தடித்து ஆறப் போடலாம். ●

# பாலை வார்த்துட்டீங்க!

**உ**ணர்வுகளுக்கும் யதார்த்தத்துக்கும் இடையிலான இடைவெளியை அழகாகப் படம் பிடித்துக் காட்டியிருந்தார் மு.மாறன்.

**- சிவா, வெங்கமேடு**

**த**னிமையின் கொடுமையை, காதலின் இனிமையை, தோழமையின் புரிதலைப் படம் பிடித்துக் காட்டிய பாங்கான படைப்பு காதல் சதுரங்கம்!

**- என்.சண்முகம், திருவண்ணாமலை**

**பே**ரீச்சை மூலம் ஓர் ஏக்கர் நிலத்திலிருந்து பதினைந்து லட்ச ரூபாய் வரை லாபம் ஈட்டலாம் என்று கட்டுரை வெளியிட்டு விவசாயிகள் வயித்துல பாலை வார்த்துட்டீங்க!

**- க.மு.சுந்தரம், சிலமலை**

**கா**ங்கிரஸுக்கு அழகே கோஷ்டி தான் என்பதை, கோஷ்டித் தலைவர்களின் உள்ளக் கிடக்கை மூலம் (கற்பனை தான் என்றாலும்) வெளிக் கொணர்ந்தது அருமை.

**- வே.ஈஸ்வரன், இராஜபாளையம்**




**அ**ட்டையிலும் வித்தியாசம் காட்ட 'கல்கி'யால் மட்டுமே முடியும். சபாஷ்!

**- ஆர்.ராமசுப்ரமணி, திருவாரூர்**

**அ**.இ.மு.க.வில் முதல்நிலை, இரண்டாம் நிலைத் தலைவர்கள் பற்றிய கேள்விக்கு தராசாரின் பதிலில் கொஞ்சம் குசும்பு கொப்பளித்தது.

**- மு.சுகாரா, தொண்டி**

**ப**ரிமாற்றம் கவிதை தித்தித்திடும் தேன் பலா.

**- க.குமரேசன், வில்லிவாக்கம்**

**சி**ன்ன விஷயங்களும், பெரிய தலைவர்களும்... தலையங்கத்தில் தமிழக முதல்வருக்கு, இதமாகவும், பதமாகவும் எடுத்துக் கூறிய விதம் மிகவும் பிரமாதம்.

**-ச.ஆறுமுகம், வண்ணாரப்பேட்டை**

**மா**நில தலைமைக் கழகம் முன்பு தட்டி, போஸ்டர் வைக்க ஒவ்வோர் அ.இ.மு.க. தொண்டனுக்கும் உரிமையுண்டு. அதைத் தடுக்கும் உரிமை யாருக்கும் இல்லை.

**- பா.சு.மணிவண்ணன், திருப்பூர்**

**ஸ்ரீ**மட்டபல்லி மங்களாஷ்டகம், குறையொன்றுமில்லை தொடரின் கிரீடம். பூஜையறையில் வைத்துப் படித்து வருகிறேன்.

**- ஜே.துரைராஜ், ஆலப்பாக்கம்**

**'கு**றையொன்றுமில்லை' தொடர் எதிர்பாராத தருணத்தில் இடுதிப்பென முடிந்ததில் கொஞ்சம் வருத்தம்தான்.

**- கவுசல்யா, வடபழனி**

**மு**க்கூரின் பக்தி ரசம் சொட்டும் தொடரின் மூலம் நரசிம்ஹரின் பெருமையை நன்றாக உணர்ந்து கொள்ள முடிந்தது.

**- ஆர்.சுப்பிரமணி, திண்டிவனம்**

ட்டமேஜை

# தாவணி நினைவுகள்

"நீங்க ஏன் சித்தப்பா கல்யாணமே செய்துக்கல?"

தோசையின் முனையை விண்டு, அதைத் தக்காளிச் சட்னியில் லாகவமாகத் தோய்த்து வாய்க்குள் போட்டுக் கொண்டே கேட்டாள் ஜெயஸ்ரீ.

"உனக்குத் தெரியாதாக்கும்" என்றவன், கரண்டியில் எடுத்த மாவைக் கல்லில் ஊற்றினேன்.

"தெரியாததாலதானே கேட்கிறேன்" என்றாள்.

"உன் அப்பா, பெரியப்பா, தாத்தான்னு எல்லோரும் பிஸினஸ், பணம்னு ஒரே ரதத்துல பூட்டின குதிரைகளா போய்ட்டிருந்தாங்க. நான் கதை, கவிதை, சமூக இயக்கம்னு வேற பாதையில போனேன். இப்படி இருந்தா ரதம் எப்படி நகரும்? அவங்க பக்கம் என்னை இழுக்கப் பார்த்தாங்க. முரண்டு பிடிச்சேன். 'சே! இவன் சரிப்பட மாட்டான்'னு ரதத்துல இருந்து கழட்டி விட்டுட்டாங்க. இன்னொரு தோசையைப் போடட்டுமா?"

"அவ்வளவுதானா?"

"இருக்கு. போட்டுக்க."

"நான் கேட்டது விஷயம் அவ்வளவுதானான்னு."

"வேற என்ன? நம்மோட சடங்கு, சம்பிரதாயங்கள்ல இருக்கிற சில பைத்தியக்காரத்தனம் பிடிக்காது. உள்ளே புகுந்து எதையாவது சொல்வேன். அதனால நல்லது கெட்டதுன்னு எதுலயும் உள்ளயே விட மாட்டாங்க. தாத்தா செத்தப்ப பாட்டிக்குச் செய்ய இருந்த சடங்கைத் தடுத்தேன். வந்திருந்த பெரிய மனுஷங்களை எதிர்த்துப் பேசிட்டேனாம். அதான் இப்படித் தனியா குடித்தனம் வெச்சுட்டு, கூடப் பொறந்த கடனுக்கு கவனிச்சுக்கறாங்க."

"இது ஊருக்கே தெரிஞ்ச கதையாச்சே. வேற ஒண்ணுமில்லியா?" என்று கேட்டவாறு தட்டை நீட்டினாள்.

தோசையைப் போட்டுவிட்டு "வேற என்ன இருக்கு?" என்று கேட்டேன்.

"நான் ஒரு விஷயத்தைக் கேள்விப் பட்டேன். ரொம்ப வருஷத்துக்கு முன்னாடியே கேள்விப்பட்டதுதான். ஆனா அப்ப நான் சின்னப் பொண்ணு. அதைப் பத்தி கேட்கறது மரியாதை இல்லைன்னு பேசாம இருந்துட்டேன். இப்ப கேட்கிற வயசு வந்துட்டதா நினைக்கறேன்" என்றாள் தயக்கமாக.

ஜெயஸ்ரீயை நிமிர்ந்து பார்த்தேன். ஆம்! வளர்ந்துதான் விட்டாள். இருபது வருடங்களுக்கு முன்னால் அண்ணியை முதன் முதலில் எப்படிப் பார்த்தேனோ அப்படி இருக்கிறாள். என்ன... அண்ணி சேலையில் இருப்பார்; இவள் சுடிதாரில். மற்றபடி அதே நிறம், உயரம், சிரிப்பு.

நான் வீட்டை விட்டு வந்தபோது இவளுக்கு வயது ஐந்தோ, ஆறோ. என் கையைப் பிடித்துக்கொண்டு அழுதாள். "நானும் சித்தப்பா கூடவே போறேன்" என்றாள்.

அண்ணி முதுகில் ஓர் அறைவிட்டு இழுத்துக் கொண்டார். ஆனாலும் ஜெயஸ்ரீ அடிக்கடி என் வீட்டுக்கு வந்துவிடுவாள். அண்ணன் வந்து அவளை இழுத்துச் செல்வதற்குள் படாதபாடு படுவார். அப்போது முதல் இப்போதுவரை இங்கே வருவது இவள் மட்டும்தான். பெரிய அண்ணனின் இரண்டு பையன்கள் அரை டிராயர் காலத்தில் வந்ததோடு சரி. இப்போது மீசை முளைத்துவிட்டது.



அதனால் வருவதில்லை.

ஜெயஸ்ரீயின் வருகை எனக்கும் ஆறுதலாக இருக்கிறது. அதிலும் அவள் வளர வளர அவளது தோற்றத்தைப் பார்க்கும் போதெல்லாம்...

"கேட்கட்டுமா சித்தப்பா?"

"என்ன கேட்கப்போறே?"

"இங்கே புழுக்கமா இருக்கு. வேலைய முடிச்சுட்டு வாங்க" என்றபடி வெளியே சென்று விட்டாள்.

அவள் என்ன கேட்கப் போகிறாள் என்பதை யூகிக்க முடிந்தது. எப்படிப் பதில் சொல்ல வேண்டுமென மனத்தில் ஒத்திகை பார்த்துக் கொண்டேன். இரண்டு தோசைகளைச் சுட்டு, தட்டில் வைத்துக் கொண்டு ஹாலுக்கு வந்தேன்.

தொலைக்காட்சியில் பாடல் ஓடிக் கொண்டிருந்தது. காதலன் காதலியை 'தாவணி போட்ட தீபாவளி' என வர்ணித்துக் கொண்டிருந்தான். என் தலை தெரிந்ததும் டி.வியின் சுருதியைக் குறைத்துக் கொண்டாள்.

ரிமோட்டைக் கீழே வைத்துவிட்டு தக்காளிச் சட்னிக் கிண்ணத்தை எடுத்த ஜெயஸ்ரீ, என் தட்டில் ஊற்றியவாறு "எப்படி இருக்கு சித்தப்பா?" என்று கேட்டாள்.

"சாப்பிட்டுப் பார்த்துத்தானே சொல்ல முடியும்? போன முறை உப்பை அள்ளிக் கொட்டி இருந்தே" என்றேன்.

"ஐய! பாட்டைப் பத்திக் கேட்டேன்" என்றாள்.

"கேட்கறதைத் தெளிவா கேளு. நல்லாத்தான் இருக்கு."

"காதல் வந்தா இந்த மாதிரி வர்ணனை தானா வருமா சித்தப்பா?"

"என்னக் கேட்டா எப்படித் தெரியும்?"

"நீங்களும் காதலிச்சவர்தானே?"

"யார் சொன்னா?"

"யாரோ. வேற மதத்துப் பெண்ணைக் காதலிச்சதாவும் வீட்ல சம்மதிக்காத தாலதான் கல்யாணம் பண்ணிக்காம இப்படித் தனியா..."

சிரித்தேன். "அறிவுக் கொழுந்தே.

## ஆரணி யுவராஜ்



இதுல கொஞ்சமாச்சும் லாஜிக் இருக்கா? முட்டாள்தனமான சடங்குகளைச் செய்யக்கூடாதுன்னு ஆயிரம் பேருக்கு முன்னாடி பெரிய தாத்தாவையே கைய நீட்டிப் பேசினவன் நான். வேற மதத்துப் பெண்ணைக் கல்யாணம் செய்துக்க எவ்வளவு நேரமாகும்? எதுக்கு இப்படித் தனியா இருந்துக்கிட்டு நீ செய்யற தக்காளிச் சட்னியை எல்லாம் சாப்பிடப் போறேன். தலையெழுத்தா?"

"இந்த ஒரு இடம்தான் உதைக்குது. ஆனா ஒண்ணு மட்டும் நிச்சயம். நீங்க கண்டிப்பா காதலிச்சு இருக்கீங்க. உங்க துணிச்சலையோ, முற்போக்கையோ பயன்படுத்த முடியாத ஒரு விஷயம் இதுல இருந்திருக்கு. கரெக்டா?"

"எப்படிச் சொல்றே?"

"என் உள்மனசு சொல்லுது."

"சொல்லும். ஏன்னா இப்ப உனக்கு இருபது வயசு. இந்த வயசுல தனியா இருக்கிற மனுசனைப் பார்த்தா அப்படித்தான் தோணும்" என்று புன்னகைத்தேன்.

"மறைக்கறீங்க. பரவாயில்லை, எப்படியும் தெரிஞ்சுக்காம விடமாட்டேன். நேரமாச்சு, நான் கிளம்பறேன்" என்றபடி எழுந்தவன் புத்தகத்தை எடுத்துக் கொண்டு வெளியேறினான்.

**வீ**ரம் எல்லா விஷயங்களிலும் ஜெயிப்பதில்லை. சில இடங்களில் தோற்றுத்தான் விடுகிறது. எனக்கும் அப்படித்தான் நடந்தது. காலமெல்லாம் அஞ்ஞான வாசம் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.

'உனக்கு யார் சொன்ன'தென ஜெயஸ்ரீயிடம் மீண்டும் கேட்டிருக்கலாம். அவளும் சொல்லி இருப்பாள். அது நிச்சயமாக நான் யூகித்த நபராகத்தான் இருக்கும். எதற்குத் தேவையில்லாமல் இந்த மாலை நேரத்தைப் புழுக்கமாக்கிக் கொள்வது?

நான் புத்தக அலமாரியை நெருங்கி, அந்தக் கனமான புத்தகத்தை உருவினேன். இலக்கியம் பற்றிய ஆய்வுப் புத்தகமான அதன் தலைப்பைப் பார்த்தாலே யாரும் அடுத்த பக்கத்தைப் புரட்ட மாட்டார்கள்; அப்படியே வைத்து விடுவார்கள் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கை. இதுவரை என் நம்பிக்கை பொய்த்ததில்லை.

புத்தகத்தைப் புரட்டினேன். உள்ளே அந்தப் புகைப்படம். ஏன் இப்படிச் சிரமப்பட்டு எட்டிப் பார்க்கிறீர்கள்? நானே காட்டுகிறேன். பாருங்கள். 'அட! ஜெயஸ்ரீ. பாவாடை, தாவணியிலும் அழகாகவே இருக்கிறாளே' என்று நீங்கள் மனதுக்குள் ரசிப்பது தெரிகிறது.

அவளாவது பாவாடை, தாவணி போடுவதாவது? மஞ்சள் நீராட்டின் போது போட்டுக் கொண்டவள்தான். அப்போது எடுத்த புகைப்பட ஆல்பத்தையே எங்கோ மறைத்து வைத்து

> "எங்கம்மாகிட்டே ப்ராக்ரஸ் கார்டில் கையெழுத்து வாங்கும்போது செம டோஸ்."
>
> "மார்க் ரொம்பக் கம்மியா?"
>
> "இல்லே. அவங்க டீவி சீரியல் பார்க்கும்போது ப்ராக்ரஸ் கார்டை நீட்டிட்டேன்!"
>
> – என்.கே. கண்ணன்

விட்டாள்.

"போங்க சித்தப்பா. பழைய படத்துல வர்ற ஹீரோயின் மாதிரி இருக்கு. ஃப்ரண்ட்ஸ் பார்த்தா கலாய்ச்சுடுவாங்க" என்றாள்.

'அப்படியானால் இது? அடப்பாவி...' என்று நீங்கள் முறைப்பதும் புரிகிறது.

வெயிட்! வெயிட்! இது என்ன இந்தக் காலத்து புரட்சிகரமான தமிழ் சினிமாவா? அண்ணன் மனைவி நம்மைவிட வயது குறைந்தவராக இருந்தாலும் அண்ணி என்று மரியாதையாகவே அழைப்பது நமது மரபு. இது அண்ணி இல்லை. அவர் தங்கை கல்யாணி.

**அ**ண்ணனுக்குப் பெண் பார்க்கச் சென்ற இடத்தில்தான் அவளையும் முதன் முதலாகப் பார்த்தேன்.

"அக்கா, தங்கச்சி ரெண்டு பேரும் ஒரே மாதிரியா இருக்காங்களே. இதுல யாரு பொண்ணு?" என்று கேட்டான் பாட்டி

"நீங்க யாரும் சிரமப்படக் கூடாதுன்னுதான் இவ பட்டுச் சேலையிலும் நான் சாதாரண தாவணியிலும் இருக்கேன்" என்று வெடுக்கென பதில் சொன்னாள் கல்யாணி.

சரியான வாயாடியாக இருந்தாள். திருமணத்தில் அவள் செய்த குறும்புகளை மிகவும் ரசித்தேன். வீட்டுக்கு வரும் போதெல்லாம் என் அறைக்கு வந்து புத்தகங்களைப் புரட்டுவாள்.

"இது நீங்க எழுதின கவிதையா? இது வரைக்கும் பதிமூனு தடவை படிச்சேன். புரியவே இல்லையே..."

"உன்னை மாதிரி சாதாரண ஆட்களுக்குப் புரியாது."

"கவிதை யாரைப் பத்தினது?"

"அடிமையா இருக்கறோம்ங்கற உணர்வே இல்லாம இருக்கிற பெண்



களைப் பத்தினதுதான்."

"சரி, இது நான்தானே வெச்சுக்கங்க... யாருக்காக எழுதினீங்களோ அவங்களுக்கே புரியாதபோது இதனால என்ன லாபம்? 'கும்மியடி பெண்ணே கும்மியடி'ன்னு பாரதி பளிச்சுன்னு சொன்னதாலதான் ஏதோ கொஞ்ச பேராவது கும்மி அடிக்கறாங்க. அவர் இந்த மாதிரி எழுதி இருந்தா நாங்க மூடி வெச்சுட்டு அம்மிதான் அரைச்சிருப்போம்" என்றாள்.

ஓங்கி அறைந்ததைப் போலிருந்தது. அதன் பிறகுதான் என் எழுத்துகளில் மாற்றம் செய்தேன். அவை பத்திரிகைகளில் வரும்போதெல்லாம் அவளிடமிருந்து தவறாமல் கடிதம் வந்துவிடும்.

ஒரு முறை வீட்டுக்கு வந்திருந்தபோது "இது உனக்காக மட்டும் எழுதின கவிதை" என்று கூறிக் கொடுத்தேன்.

படித்துவிட்டுச் சிரித்தாள். "வேணாங்க. இனிமே இந்த மாதிரி எழுத முயற்சி பண்ணாதீங்க. உங்களுக்குக் காதல் கவிதை எழுத வராது. விட்டுடுங்க. நானா இருக்கவே சகிச்சுக்கிட்டேன்."

"அப்போ என்னை..."

"இனிமே இப்படிப் பயமுறுத்த மாட்டேன்னு சத்தியம் பண்ணுங்க. சம்மதிக்கறேன்" என்று கூறிக் குறும்பாகப் புன்னகைத்தாள்.

தாம்பரத்தில் இருக்கும் பையனும் தேனாம்பேட்டையில் இருக்கும் பெண்ணும் காதலித்தாலே விஷயம் கசிந்து, இருவரும் சைதாப்பேட்டை காவல் நிலையத்தைத் தஞ்சமடைகிறார்கள். எங்கள் விஷயம் தெரியாமல் இருக்குமா?

தெரிந்தபோது அண்ணி ருத்ர தாண்டவம் ஆடினார். "அவளை சிங்கப்பூர்ல இருக்கற என் மாமா பையனுக்குக் கட்டிக் கொடுக்கறதா இருக்காங்க. இப்படி ஜோல்னா பையை மாட்டிக்கிட்டுத் திரியறவனுக்கு வாழ்க்கைப்பட தலையெழுத்தா? மாமா! உங்க பிள்ளையை மரியாதையா விலகச் சொல்லுங்க. இல்லைன்னா நானும் குழந்தையும் மண்ணெண்ணெய் ஊத்திக் கொளுத்திக்குவோம். உன் கொழுந்தனால இப்படி ஆயிடுச்சேன்னு பெத்த வீட்டுல பேர் வாங்கறதைவிட செத்துடறது நல்லது" என்றார்.

அப்புறமென்ன? கல்யாணி சிங்கப்பூரின் குடிமகளானாள். அண்ணி சேலை கட்டிய சாணக்கியன். கடல் கடந்து இருக்கும் தங்கையின் வாழ்க்கை எந்தக் காலத்திலும் பாதிக்கக்கூடாது என்பதற்காக எனக்கு வேறொரு காதலியை உருவாக்கினார்.

ஜெயஸ்ரீயைப் போல் எத்தனை பேர் சந்தேகமாகக் கேட்டு இருக்கிறார்கள்? மூன்று முறை சமாளிப்புடன் பதில் சொன்னால் போதும். நான்காவது முறை கேட்க மாட்டார்கள்; சலித்துப்போய் விட்டு விடுவார்கள். நீங்கள் மட்டும் அவளிடம் சொல்லாமல் இருந்தால்... ○

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 707 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.